தேச பக்தர் சரிதை. — 7

பண்டித

# மதன் மோகன் மாலவ்யா

AR. Senkaranarayanan

இது

'தமிழ் சுயராஜ்யா' பத்திரிகையின் ஆசிரியராகவும்,
'சுதேச மித்திரன்' உதவி ஆசிரியராகவு மிருந்தவரும்,
பாபு ராஜேந்திரப் பிரசாத், காங்கிரஸ் சரித்திரம், ஜான்ஸி ராணி
லக்ஷ்மீபாய், சுவாமி ராமதீர்த்தர், அப்துல் கபார்கான்
முதலிய நூல்களின் ஆசிரியருமான

**எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்**

இயற்றியது

சென்னைக் கார்ப்பொரேஷன் டிப்டி மேயரும்,
பார்லிமெண்டரி காரியதரிசியுமான

**திரு. எம். பக்தவத்ஸலம், பி.ஏ., பி.எல்.,**

அவர்கள் சிறப்புரையுடன் கூடியது.

அல்லயன்ஸ் கம்பெனி,
மயிலாப்பூர் :: சென்னை

 [விலை அணா 6

ச. 15.

# முன்னுரை

நம் நாட்டுத் தலைவர்களின் சரிதங்களை தமிழில், எளிய நடையில், சுருக்கமாக எழுதிவரும் முயற்சிகளை நாம் மகிழ்ச்சியுடன் வரவேற்க வேண்டும். தேச சேவையில் ஈடுபட்ட மகான்களின் தியாகம், உபதேசம், ஊழியம் முதலிய வாழ்க்கை விவரங்களை நம் மாணவர்களும் மற்றத் தேச மக்களும் தெரிந்துகொண்டு அவர்களைப் பின்பற்றப் பயிலவேண்டும். ஆனால் இத்தகைய நூல்கள் இதுவரையில் அதிகமாகத் தமிழில் எழுதப்படவில்லை. இக் குறையைக் கொஞ்ச காலமாகப் போக்கிவரும் ஸ்ரீமான் எம். எஸ். சுப்பிரமணிய ஐயரைப்போன்ற நூலாசிரியர்களையும், அல்லயன்ஸ் கம்பெனியார் போன்ற பதிப்பாளர்களையும் நாம் பெரிதும் பாராட்டவேண்டும். ஸ்ரீமான் எம். எஸ். சுப்பிரமணிய ஐயர் தேச விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டுப் பல ஆண்டுகளாக உழைத்துவரும் அரிய தேசபக்தர். சுலபமான தமிழ் நடையில் மட்டுமல்ல; சொற்ப விலையில், அவர் வெளியிட்டிருக்கும் தேசபக்தர்களின் சரிதங்களை தமிழ் மக்கள் பேரவாவுடன் வாங்கி வாசித்திருக்கின்றார்கள்.

தேச பக்தி ஊட்டக்கூடிய நூல்களை வெளியிட முற்பட்டிருக்கும் அல்லயன்ஸ் கம்பெனியாரையும் தமிழர் நன்கறிவார்கள்.

நாட்டின் விடுதலைக்கென்றே தம்மை அர்ப்பணம்செய்து பூர்ண விடுதலை தம் ஆயுட்காலத்திலேயே பெறக்கூடுமென்ற மன உறுதியுடன் உழைத்துவரும் பண்டித மதன் மோகன் மாளவ்யாவின் வாழ்க்கை விவரம் வாசிப்பவர்களுக்குத் தேசபக்தி ஆவேசம் எழக்கூடிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது.

பண்டித மாளவியா பல ஆண்டுகளாகச் செய்துவரும் தேசசேவை, அபிப்பிராய பேதங்கள் ஏற்படினும் நாட்டினர் யாவரும் விடாமல் அப்பெரியாரைப் போற்றும் தன்மை, இவற்றின் ரகசியத்தை நம் மாணவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும்.

இத்தகைய நூல்கள் பள்ளிக்கூடங்களில் பாட புத்தங்களாக வைக்கப்பட வேண்டும்.

இந்நூலின் பதிப்பாளராகிய அல்லயன்ஸ் கம்பெனியார் மேலும் மேலும் இத்தகைய நூல்கள் வெளியிடத் தமிழ் மக்கள் ஆதரவு காட்டுவார்களென்று நம்புகிறேன்.

மயிலாப்பூர்,
14-10-37.

எம். பக்தவத்ஸலம்.

---

# பொருளடக்கம்

பண்டித

# மதன் மோகன் மாளவ்யா

## 1. முன்னுரை

மோகனதாஸ் காந்தி தெய்வப் பிறவி. பண்டித மாளவியா தர்ம வடிவம். முன்னவர் மகாத்மா! பின்னவர் தர்மாத்மா! மகாத்மா வைசியகுல திலகம். தர்மாத்மா வேதியகுல விளக்கு. காந்தி அஹிம்ஸா மூர்த்தி. மாளவியா கருணைக் கடல். மோகனதாஸின் முகத்தில் அருள் ஒழுகும். மாளவியாவின் முகத்தில் அன்பு சொட்டும். மகாத்மாவை மாநிலம் போற்றும். தர்மாத்மாவை மன்னரும் வணங்குவர். காந்தி எனும் பெயர் காரணச் சிறப்புப் பெயர். பண்டிதர் எனும் பெயரும் அப்படியே.

இருவரும் பாரத தேவியின் இணையிலா மைந்தர். ஒருவரின் உயர்வுக்கு இமயமலையை ஒப்பிடலாம். மற்றவரின் மேதைக்கு கங்காநதியை உவமிக்கலாம். உலக நன்மையே இருவருக்கும் இலட்சியம். தேசம் விரும்பின், தூக்குமேடை ஏறவும் ஒருவர் தயார். தேசநலம் கண்டபின்பே, மற்றவர் மரிக்க மனமொப்புவார். முன்னவருக்கு வயது எழுபது. பின்னவருக்கு வயது எழுபத்தைந்து. இருவருக்கும் பரஸ்பரம் உள்ளன்பு மிகுதி. முன்னவரிடம் பின்னவருக்கு மதிப்பு அதிகம். பின்னவரிடம் முன்னவருக்கு பக்தி விசுவாசம் ஜாஸ்தி. 'நல்லாரைக் காண்பதுவும் நன்றே' எனும் வாக்கினுக்கு இருவருமே ஏற்ற உதாரணம்.

ஜனக மகாராஜன் இல்லறத்தில் இருந்தான். எனினும், பூண்டு நின்றதோ துறவறம். அம்மன்னவனை இல்லறத்துறவி என்பர். அவ்விதமே துலங்குபவர் நமது பண்டிதர். மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை மூன்றும் பண்டிதரை அணுகியதில்லை. ஆஸ்தி சேகரிக்க அவருக்கு ஆர்வம் பிறந்ததே கிடையாது. மாதர் அனைவரையும் தாய்மார் போலவே மதிப்பார்; தேவி என்றே அழைப்பார். போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து. இதனைப் பண்டிதரிடம் பெரிதும் காணலாம்.

அந்தணர் என்போர் அறவோர். இது திருவள்ளுவரின் வாசகம். ஒப்பற்ற அந்தணர் பண்டித மாளவியா. நிர்மல சித்தம், தன்னலத் தியா

கம், வாய்மை, தூய்மை, அடக்க ஒடுக்கம், பொதுநல சேவகம், கருணைப் பிரவாகம் முதலியன வேதியரின் விழுமிய குணங்கள். இவை அனைத்தும் பண்டிதரிடம் குடிகொண்டுள. எல்லார்க்கும் ஒவ்வொன்றிலே சிறப்பு என்ருள் ஔவை. கல்வி யறிவு, சமய ஞானம், ராஜீய ஆராய்ச்சி, சாஸ்திரத் தேர்ச்சி, தொழில் முயற்சி முதலிய பலவகையிலும் பண்டிதர் நனி சிறந்தவர்.

ஐம்பது ஆண்டுகளாக மாளவியா ஓயாத் தேச சேவகர். தேச முன்னேற்ற இயக்கம் எதிலும் அவர் பங்கு அதிகம். ஆதலின் ஐம்பதாண்டு தேச சரிதமே அவரது வாழ்க்கைச் சரிதம். அச்சரிதத்தை வரன்முறையாக வரைதல் எளிதன்று. ஆயினும், சுருங்கச் சொல்லி ஓரளவு விளங்க வைப்போம்.

---

## 2. பரம்பரை

பாரத பூமியிலே ஆதியில் ஐம்பத்தாறு தேசங்கள். அவற்றில் ஒன்று மகிமை வாய்ந்த மாளவ தேசம். முன்னம் அங்கே நான்மறையாளர் மிக அதிகம். அன்னர் அனைவரும் வேத சாஸ்திர விற்பன்னர். ஒரு சமயம் அங்கே ராஜீயக் கொந்தளிப்பு மிகுந்தது.. ஆதலின் அவ் வேதியரிலே பலர் வேற்றிடம் போயினர். போய்க் குடியேறிய இடம் பிரயாகை. மாளவ தேசத்தினின்று வந்ததனல்

அவர்களுக்கு **மாளவ்யா** எனும் காரணப் பெயர் ஏற்பட்டது.

பிரயாகையில் வந்து குடியேறியவரில் ஒருவர் பண்டித **பிரேமதர** மாளவியா. இவர் மிக்க ஆசார சீலர்; ஈசுவர பக்தி நிரம்பியவர்; வடமொழியிலும் ஹிந்தியிலும் வல்லவர். இவர் புதல்வர் பெயர் பண்டித **விரஜநாத** மாளவியா. இவரும் தந்தையைப் போன்ற தனயர்; கல்விக் களஞ்சியம்; பாகவதத்தில் பெரும் புலமை வாய்ந்தவர். சுலோகங்கள் விளங்காவிடின், விரஜநாதரை யணுகி, அனைவரும் போதம் கொள்வர். விரஜநாதரிடம் பொருள் செல்வம் பூஜ்யம். மருகியான நாமகளும், மாமியான மலர்மகளும் ஒருமித்து வாழ்தல் ஏது? போதாக் குறைக்கு விரஜநாதருக்கு மக்கள் செல்வம் மிகுதி.

பண்டித விரஜநாதரின் மூன்றாவது புதல்வர் நமது **பண்டித மதன் மோகன் மாளவியா.** அலகபாத் நகரிலே 1862-ஆம் ஆண்டில் அப்பெரும் புதல்வர் தோன்றினர். உரிய காலத்திலே வித்தியாரம்பம் செய்வித்தனர்; வடமொழியும் ஹிந்தியும் வீட்டிலேயே சொல்லிக் கொடுத்தனர்; பின்பு ஒரு பாடசாலைக்கு அனுப்பினர். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்.' சிறு பண்டிதரின் திறங்கண்டு ஆசிரியர் அதிசயித்தார். ஒரு முறை சொன்னால் போதும். எல்லாம் மனத்தில் பதிந்துவிடும். இரண்டா முறை சொல்லிக் கொடுப்பதும் இல்லை; கேட்பதும் கிடையாது. பையன் மகா மேதையாவான் என்றனர் பலரும்.

சின்ன வயதிலேயே அவரிடம் சிறந்த குணங்கள் படிந்தன. வைகறையில் துயில் எழுதல், ஆண்டவனை வழுத்துதல், ஆசாரமாக வாழ்தல், அன்புரை பேசுதல், அடங்கி நடத்தல் முதலியன பிறவிக் குணங்களாயின. ஊராரும் உற்றாரும், அந்நியரும் ஆசிரியரும் அபரிமிதமாக ஆசிகூறி வந்தனர். ‘விரஜநாதர் புண்ணியசாலி, சற்புத்திரன் பிறந்தான்’ என்று பேசாதார் கிடையாது. அப்போது ஆங்கிலக் கல்வி ஓங்க முயலுநாள். ஜில்லா ஆங்கில பாடசாலைக்கு நமது பண்டிதரை அனுப்பினர்.

பெருமதி படைத்த பண்டிதர் ஆங்கும் பெருமை பெற்றார்; பெயர் வாங்கினார்; படிப்படியாக உயர் வகுப்புக்களில் புகுந்தார்; எல்லாப் பாடங்களிலும் சிறந்து விளங்கினார்; எல்லா மாணவருக்கும் இனியவராக இருந்தார்; நடையும் உடையுங் கண்டு நல்லவன் என்று நகர மாந்தர் மெச்சினர். கலாசாலைத் தலைவரான ஹாரிஸன் என்பாரும் இறும்பூது எய்தினர். ஆங்கிலம் பயிலுகையில், வடமொழிப் பயிற்சியை அவர் கைவிடவில்லை. 1884-ஆம் ஆண்டில் அவருக்கு பி. ஏ., பட்டம் கிடைத்தது. அப்போது வயது இருபத்து மூன்று. இதற்கு இடையில் (1881 - ஆம் ஆண்டில்) அவருக்கு விவாகம் நடந்தது.

———

## 3. ஆசிரிய பீடம்

மேலும் படிக்கவே பண்டிதருக்கு ஆசை. ஆயினும் குடும்ப நிலை இடந்தரவில்லை. கலைமகளின் அருள் பெற்றும் என்ன? காலந்தள்ள வேண் டுமே. தொழிலில் சிறந்தது யாது என்று அவர் சிந்தித்தார். கற்றதைப் பிறருக்கு ஊட்ட வேண் டும், மேலும் கற்க வகை வேண்டும். இதற்கு ஆசி ரியத் தொழிலே சாலச் சிறந்தது என்று தோன்றி யது. அது சமயம், (அவர் படித்த) பள்ளிக்கூட அதிகாரிகள் ஓர் ஆசிரியரை நாடி நின்றனர். ஆசிரியத் தொழில் வலுவில் கிட்டியது. உடனே அமர்ந்தார் பண்டிதர்.

மாதச் சம்பளம் மிகவும் கொஞ்சம். குடும் பமோ பெரியது. காப்பது எங்ஙனம்? கிடைத் ததைக் கொண்டு களித்தலே பெருமை என்று கொண்டார்; சுகமே காலங்கழிக்க முற்பட்டார்; இளஞ்சிறார்க்கு இனிய போதம் புகட்டுவதில் இன் பம் கண்டார்; அன்னாரை நன்மக்கள் ஆக்குவதில் ஆவல் பூண்டார். இதுவே உடல் எடுத்த பயன் என்று உறுதி பிறந்தது. ஆசிரியராக அமர்ந்த அடுத்த ஆண்டிலே (1885) காங்கிரஸ் மகாசபை தோன்றலாயிற்று.

இதற்கு இடையில் இரு பெரிய நோக்கங்களில் அவர் ஈடுபடலானார். ஒன்று, கல்வியைப் பரப்பு தல். மற்றொன்று, ஆரிய தர்மத்தை எடுத்துரைத் தல். முன்னது கை கூட வேண்டி, நம் பண்டிதர்

ஒரு ‘கல்விக் கழகம்’ கண்டார். பின்னதற்கு, ‘ஹிந்து சமாஜம்’ எனும் சபையை அமைத்தார்.

பிரயாகை என்பது புராதன ஸ்தலம். அங்கே புண்ணிய கங்கா நதியும், விழுமிய யமுனா நதியும் சங்கமம் ஆகின்றன. மாக புண்ணிய காலத்தில் இலட்சோப லட்சம் ஜனங்கள் அங்கே கூடுவர்; புனித தீர்த்தம் ஆடுவர்; பெருமானைத் துதிப்பர். அது கண்ட பண்டிதர் தமது இளவயதில் சகாக்களுடன் அங்கே செல்வார்; உயர்ந்த இடமொன்றில் ஏறிக் கொள்வார்; மக்கள் அனைவரையும் ஈசுவர வடிவம் என்று கொள்வார்; வேத சாஸ்திர உண்மைகளை விண்டு சொல்வார்! சகாக்களிலே சிலர் அது கண்டு அதிசயங் கொள்வர். பிரசங்கம் புரிவதுடன் பண்டிதர் நின்று விடுவதில்லை. மக்களுக்குத் தொண்டு புரியவும் முற்படுவார்.

இத்தகைய சமயம், காங்கிரஸ் மகாசபை தோன்றியது. யாது காரணமோ அறியோம். முதல் காங்கிரசுக்கு அவர் போகவில்லை. அலகபாத் நகரிலிருந்து பம்பாய் போவதில் செலவு அதிகம் அல்லவா? இதுவே காரணம் போலும். எனினும், உடல் எடுத்த பயன் உலகினுக்கு உழைப்பதே எனும் உணர்ச்சி ஓங்கி வந்தது. அதனால் மகாசபையில் சேர்ந்துழைக்கும் துடிப்பு விஞ்சியது. அரசாங்கக் கல்லூரியில் ஆசிரியராக இருந்தும், அது குறுக்கிடவில்லை.

———

## 4. காங்கிரஸ் சேவை

கல்கத்தாவிலே 1886-ஆம் ஆண்டு காங்கிரஸ் மகாசபை கூடியது. அப்போது பண்டிதர் ஒரு பிரதிநிதியாகச் சென்றார். சபாநாயகரான தாதாபாய் நௌரோஜியும் பிறரும் பேசுவதைப் பார்த்தார். தாமும் பேசவேண்டும் எனும் எண்ணம் உதித்தது. அருகே இருந்த ஒரு பெரியார் தட்டிக்கொடுத்தார். உடனே எழுந்தார் பண்டிதர். நிதானமும் நேர்மையும் கம்பீரமும் கண்ணியமும் ததும்பப் பேசினார்.

'ஆண்டுதோறும் சட்டங்களும் சாஸனங்களும் கிளம்புகின்றன. அவற்றிற்கு உட்பட்டு நாம் வாழ்கின்றோம், வருந்துகின்றோம். எனவே, அவற்றைக் குறித்து நம் கருத்தை அறிவிக்க நமக்கு உரிமை வேண்டாமா? ஒரு வார்த்தைகூடச் சொல்ல வகை இல்லையே. சட்ட சபைகளிலே நமக்குப் பிரதிநிதித்துவம் கிடையாது. இந்தியரையும் சரிசமமாக நடத்துவோம் எனும் ராணியின் வாக்குறுதி எங்கே? எல்லா மக்களையும் ஒருபடியாகப் பார்க்க வேண்டாமா? பார்க்கவில்லையே' என்று பேசினார் பண்டிதர்.

இருபத்தைந்து வயதே கொண்ட இளைஞர் இவ்வளவு அழகாகப் பேசுகிறாரே என்று பலரும் வியந்தனர், பாராட்டினர். அப்போது காங்கிரஸ் காரியதரிசியாக இருந்தவர் ஹியூம். இவர் நம் பண்டிதரின் பேச்சைக் குறித்து, அந்த ஆண்டின் அறிக்கையில் கூறியிருப்பது இது :—

'சபையோர் மிகுந்த உற்சாகத்துடன் விரும்பிக் கேட்ட பிரசங்கம், உயர் வகுப்பு வேதியரான மாளவியா செய்த பிரசங்கமே. அவரது அழகிய தோற்றம், இனிய முக விலாசம், மதி வாய்ந்த வாசகம் இவை எல்லாம் கண்டு பலரும் பரவசமாயினர்; கண்ணிமை கொட்டாமல் அவரையே நோக்கி நின்றனர். திடீரென்று அவர் எழுந்து, சபாநாயகருக்கு அருகே நின்று, வாசாமகோசரமாக நிகழ்த்திய பேருரை அனைவர் மனத்திலும் பசுமரத்தாணி போல் பதியா நின்றது.'

அத்தகைய பண்டிதரின் பேச்சு பாரெங்கும் பரவிற்று. அயோத்தியிலே ஒரு பெரிய ஜமீன்தார் ராஜா ராம பால சிங். பண்டிதரின் பெருமதி, நிதானம், உற்சாகம் இவற்றை அறியலானர் அந்த ராஜா. உடனே தமது 'ஹிந்துஸ்தான்' பத்திரிகைக்கு அவரை ஆசிரியராக அமர்த்திக் கொண்டார். அது சமயம் பண்டிதருக்கு வயது இருபத்தைந்துதான். பத்திராசிரிய பீடம் பேருழைப்புக்கு இடம், பாரோருக்குப் பலனும் விளைக்கலாம் என்று கருதினர் பண்டிதர். இரண்டரை வருஷம் அவர் தலைமையில் நடந்தது பத்திரிகை. அரசாங்கத்தார் உள்பட அனைவரும் அவரைப் போற்றினர். அப்போது மாத நிவேதனம் இருநூறு ரூபாய். அதனல் குடும்ப சிரமம் கொஞ்சம் குறைந்தது.

———

## 5. பெரியார் புகழ்தல்

மூன்றாவது காங்கிரஸ் சென்னை மாநகரில் நடந்தது. அப்போது சட்டசபைத் திருத்தம் மிகவும் முக்கியமான விஷயம். அது குறித்து மாளவியா ஆணித்தரமாகப் பேசினார். 'வரிவாங்கும்பொழுது எங்கள் வார்த்தையை மதிக்க வேண்டாமா? ஆங்கிலேயரின் ராஜீய வேதத்தில் இதுதானே முதல் வாசகம்! இந்தியராகிய நமக்கு மட்டும் அது கிடையாதோ?' என்று பேசியதுதான் தாமதம்.

அக்காலம் காங்கிரசின் பெரியார்களான ராஜா ஸர் டி. மாதவ ராவ், திவான்பகதூர் ரகுநாத ராவ், பாரிஸ்டர் நார்ட்டன் முதலியோர் புகழ்ந்தனர், போற்றினர், ஆசியும் கூறினர்! ஹியூம் சொல்வது இது:— 'பிறகு பேச எழுந்தவர் பண்டித மதன் மோகன் மாளவியா. ஆண்டில் இளைஞர்தான்; அறிவிலோ பெரியவர். காங்கிரசினிடம் பெரும் பற்றுக்கொண்டவர். அவர் பேச்சு மகா உன்னதம். ஒவ்வொரு வார்த்தையும் ஆணித்தரம். ஆழ்ந்து ஆலோசிக்கக்கூடிய உண்மை.'

அது முதல் காங்கிரஸ் மகா சபையிலே பண்டிதருக்குப் பெரும் பெயர். பேச்சு வன்மை, தர்க்கத் திறமை இரண்டும் கூடிக்கொண்டன. பண்டிதரின் பேச்சு என்றால், பலரும் அண்ணாந்து கேட்கத் தலைப்படுவர். சென்னையில் காங்கிரஸ் நடக்கிறதே, வடக்கேயிருந்து பிரதிநிதிகள் பலர் வாராரே என்று ஹியூம் கவலை கொண்டார். பண்டிதருக்கு அது

தெரியவந்தது. உடனே ஊர் ஊராகப் போனார்; காங்கிரஸைக் குறித்து எடுத்துச் சொன்னார். பலரையும் தட்டி எழுப்பினார். பிரயாணச் செலவுக்குப் போதிய பணம் கிடையாது. எனினும், அதைச் சட்டை செய்யவில்லை. எங்கும் சென்று எழுப்பினார் கிளர்ச்சி. அதனால் 45 பிரதிநிதிகள் சென்னைக் காங்கிரசுக்கு வடக்கிலிருந்து வந்தனர்.

நான்காவது காங்கிரஸை எங்கே கூட்டுவது என்று திகைத்தனர் பலரும். அப்போது அலகபாத்துக்கு அழைத்தார் பண்டிதர். பெரிய மனிதரின் சகாயம் ஆரம்பத்தில் கிட்டவில்லை. காங்கிரசை அழைத்துவிடலாம். வைத்து நடத்தி நிர்வகித்தல் எளிதன்று. எனினும் பண்டிதர் சளைக்கவில்லை. தாமே பிரதம காரியதரிசியாக இருந்தார்; சலியாமல் உழைத்தார். பண்டிதரின் உழைப்பு பலரையும் பரவசப்படுத்தியது. பின்பு பெரிய மனிதரெல்லாம் வந்து சேர்ந்தனர். மகா சபை மிகச் சிறப்பாக நடந்தேறியது. இது நிற்க.

ஹிந்துஸ்தான் பத்திரிகையில் இரண்டரை வருஷம் அவர் வேலைபார்த்தார். உள்ளதை உள்ளபடி எழுதுவதில் கொஞ்சம் சிரமம் ஏற்பட்டது. ஆதலின் அப் பத்திராசிரியப் பதவியை விடுத்தார். உடனே 'இந்தியன் யூனியன்' எனும் பத்திரிகையின் ஆசிரியரானார். பண்டிதர் அமர்ந்தது முதல், அப்பத்திரிகை பிறைமதிபோல் வளர்ந்து வந்தது. பத்திராசிரியராக இருந்து பலருக்கும் போதம் புகட்

டுதல் ஒரு புறம் கிடக்கட்டும். உள்ளதை உள்ள வாறு உரைத்து அரசாங்கத்தை விழிக்கவைக்க வேண்டும், நேர்மையாக்கவேண்டும் என்பதே பண்டிதரின் கருத்து.

---

## 6. வக்கில் தொழில்

சிறிது காலம் சென்றதும் (1891) சட்டப் பரீட்சை கொடுக்க விரும்பினார் பண்டிதர். நண்பர் பலர் வற்புறுத்தினர். ராஜா ராம பாலசிங்கும் பணவுதவி புரிய முன்வந்தார். சட்ட ஞானத் தேர்ச் சியில் அவர் முனைந்து நின்ற சமயம், காங்கிரஸ் உழைப்பு சற்றே குறையலாயிற்று. அது கண்டு ஒருவர் ஹியூமினிடம் முறையிட்டார். ஹியூம் அது கேட்டு, 'நல்லது! சட்டத் தேர்ச்சியில் பண்டிதர் முனைந்திருத்தல் சரியே' என்றார்; பின்பு பண்டி தரை நோக்கி, 'மதன் மோகன்! ஆண்டவன் உமக்கு அபார மூளை அருளியிருக்கிறார். பத்தாண்டு வக்கீல் தொழிலிலே முனைந்து நிற்பின், உயர் பதம் பெறலாம். உச்சஸ்தானமும் எய்தலாம். அப்பால் அவ்விரண்டும் பக்கபலமாக நிற்க, உமது தேச சேவையும் பொதுநல சிந்தையும் பன்மடங்கு பெருகிப் பெருமை பெறும்' என்று கூறி உற் சாகம் ஊட்டினர்.

அவ்விதமே வக்கீல் தொழிலில் முனைந்திருப் பின், தேசபந்து தாஸ், பண்டித மோத்திலால் நேரு இவர் களைப்போல் பெருஞ் செல்வம் படைத்திருக்கலாம்.

குடும்ப போஷணையை மதித்தே அவர் வக்கீலானார். ஆயினும் அத் தொழிலில் மூழ்கி விடவில்லை. நெடு நேரத்தைத் தேச சேவையே கொள்ளை கொண்டது. வக்கீலாக வந்தபின்பும் பத்திராசிரியத் தொழிலை அவர் விட்டுவிடவில்லை. அவ்வப்போது அரிய கட்டுரை எழுதி வந்தார். அவற்றை அனைவரும் ஆர்வமுடன் படித்துப் பயன் பெறுவதும் இன்பம் எய்துவதும் வழக்கம்.

சொந்தமாக ஒரு பத்திரிகை வேண்டும், அதுவும் தேச பாஷையில் இருத்தல் வேண்டும், என்று கண்டார் மாளவியா. அதன் மேல் 'அப்யுதயா' எனும் ஹிந்திப் பத்திரிகை தோன்றியது. தாய் மொழியில் பற்றும், தேச விஷயத்தில் சிரத்தையும், சமூக ஒற்றுமையில் ஊக்கமும் ஊட்டியதில், அப் பத்திரிகைக்கு இணை இல்லை என்னலாம். இன்றும், அவரது குமாரர் ஒருவரை ஆசிரியராகக்கொண்டு அப்யுதயா பிரகாசம் வீசிவருகின்றது.

---

## 7. இதர துறைகள்

ஊருக்கு உழைக்க முற்படின், ஒன்ரு இரண்டா, ஒரு நூறு துறைகள் உண்டு. மக்களுக்கு நலம் பயக்கும் துறை அனைத்திலும் அவர் மனம் குவிந்தது. சொந்த நகரின் சிந்தை மிகுந்தது. அலகபாத் நகர பரிபாலன சபையில் அங்கம் வகித்தார்; நகர பிதாவாக விளங்கினார்; எல்லா வகையிலும் நகரை உயர்த்

தினர். நகர் சபையின் உபதலைவர் பதவியும் கிட்டியது. அப் பதவியில் பெருந் திறமை காட்டினர்.

அலகபாத் நகரிலே ஒரு சமயம் பிளேக் நோய் கண்டது. அப்போது நமது பண்டிதர் அந்நகர சபையின் உபதலைவர். கொள்ளைநோய் கண்டு கலெக்டர் கலங்கினர்; பண்டிதரின் உதவியை வேண்டினர்; நோய் பரவாமல் தடுக்க வேண்டுமே என்றார். அவ்வளவுதான் தாமதம். நகர சபை ஊழியர்களுடன் புறப்பட்டார் பண்டிதர். இரண்டு வாரம் இரவு பகலாக அரும்பாடு பட்டார். நோய் கண்ட இடங்களை எல்லாம் சுத்தமாக்கினர்.

ஒரு சந்திலே வீடுதோறும் மரணம்; அதனையே பண்டிதர் குறிக்கொண்டார். அவ்விடத்தில் அல்லும் பகலும் உழைத்தார். நகர சபையின் இதர அங்கத்தினர்கள் பண்டிதரைப் பின்பற்றினர். நோயோ பரவத்தொடங்கிற்று. உடனே நோயாளிகள் அனைவருக்கும் தனிவிடுதி ஏற்பட்டது. இரண்டாயிரம் குடும்பங்கள் அங்கே தங்கியிருந்தன. காலை மாலை இரண்டு வேளையும் அவ்விடுதியைப் பார்த்து வந்தார். பிளேக் கொட்டகைக்குச் சென்று மக்களுக்கு மன உறுதி ஊட்டினர். ஏழை மக்களும் பிறரும் மாளவியாவை மனமார வாழ்த்தினர்.

குலக்கொழுந்தே போல்வர் வாலிபர். மாணவரின் நலத்தில் பண்டிதருக்கு நாட்டம் வளர்ந்தது. அலகபாத் நகரிலே நூற்றுக் கணக்கில் கலாசாலை மாணவர். அவர்களில் பலரும் வேற்று நகர வாசி

கள். சீரான போஜன சாலை இல்லை. அது பற்றி வருந்தினர். பார்த்தார் பண்டிதர். உடனே 'ஹிந்து போஜன சாலை' அமைத்தார். பணம் வேண்டுமே செலவுக்கு. சொந்தச் செலவில் எங்கும் சென்றார், வெகு பணம் திரட்டினர். சாலைக்குரிய கட்டடம் எழுந்தது. அம்மாளிகை வெகு நேர்த்தியாய் இருக்கும். சொந்த வீட்டில் சுகமே வாழ்வதேபோல் மாணவர் வாழலாயினர். கல்வி யதிகாரிகளும் பிறரும் பண்டிதரைக் கொண்டாடினர்.

கல்வி யபிவிருத்தியில் கருத்துள்ள பண்டிதரை ஸர்வகலாசாலை விரும்பி அழைத்தது. பதினாறு வருஷம் ஸர்வகலாசாலையில் அங்கம் வகித்தார். கல்வி முறை, பாட திட்டம், இவற்றை உயர்த்தினர். கலைமகளின் அருள்பெற்றவர் அல்லவா ?

சட்ட சபையில் சிறந்த பிரதிநிதிகள் இல்லையே என்பது அவர் குறை. சமயம் வாய்த்தது. அச்சபையிலும் புகுந்தார். ஆதியில் தன்னந்தனியே நின்று வாதித்தார். எந்த விஷயத்திலும் ஆழ்ந்த ஞானம். அரசாங்கத்தாரும் அதிசயிக்க மன்றாடினர் மக்களுக்காக. ஐக்கிய மாகாண சட்டசபைக்கு அவரே அந்நாளின் திலகம். வரவு செலவு கணக்கை அவரைப்போல் அலசிப் பேசினோர் அருமை.

மதப்பற்றில் முதன்மையானவர் மாளவியா. சீரோ சிறப்போ பெறவேண்டின், சமயஞானம் அதியவசியம். இதுவே அவர் கருத்து. மதபக்தி இன்றேல் மானிடர் முன்னேறுதல் எங்ஙனம்? அதி

லும் மாணவர் மகிமை எய்தல் எப்படி? ஆனதுபற்றி மதக் கல்வியும் புகட்ட விரும்பினர் பண்டிதர். தாமே சிறந்த பாடபுத்தகங்களும் எழுதினர். மதக் கல்வி எனின் குருடும் முரடும் வாய்ந்ததன்று. தெளிவும் தகவும் வாய்ந்ததே சிறந்த சமயக்கல்வி என்பது பண்டிதரின் கருத்து.

---

## 8. அக்கிராசனப் பதவி

தேச சேவையே தர்ம சேவை. அதுதான் தெய்வ சேவை. இதுவே பண்டிதரின் கோட்பாடு. அக் கருத்துடன் பற்பல துறையிலும் உழைக்கலானர் மாளவியா. தேசமக்கள் என்ன கைம்மாறு செய்வர்? முடிசூடா மன்னவனகக் கொண்டனர். 1909-ஆம் ஆண்டிலே ஸர் பிரோஸ்ஷா மேத்தா காங்கிரஸ் அக்கிராசனப் பதவி வகிக்கவேண்டும். அவர் இஷ்டப்படவில்லை. உடனே தேசம் நமது மாளவியாவை அப்பெரும் பதவியில் அமர்த்தியது.

அப்போது பண்டிதருக்கு நாற்பது வயது நிரம்பவில்லை. ஆண்டில் அவ்வளவு இளைஞரான எவர்க்கும் அன்றுவரை, அக்கிராசனப் பதவி கிட்டியது கிடையாது. அன்று பண்டிதருக்குக் கிட்டியது. பின்போ, (சிறிது காலத்திற்குமுன்) பண்டித ஜவஹர்லாலுக்கு எட்டிற்று. பாக்கியம் படைத்தோரே அப்பதம் பெற முடியும். நம்மவர் மாளவியாவின் அக்கிராசனப் பதவி கண்டு களித்தது ஒருபுறம் இருக்கட்டும். 'மாஞ்செஸ்டர் கார்டியன்'

எனும் மேனாட்டுப் பத்திரிகை சொல்லியதைப் பார்ப்போம்.

'அடுத்த வாரம் லாகூரில் கூடும் காங்கிரஸ் மகாசபையின் தலைவர் பண்டித மதன் மோகன் மாளவியா. முந்திய வருஷம் அக்கிராசனம் வகித்த டாக்டர் ராஷ் விகாரி கோஷ், அல்லது இந்த வருஷம் வகிக்க விருந்த ஸர் மேத்தா இவர்களைப்போல், பண்டிதர் அவ்வளவு பிரபலஸ்தர் அல்லர். ஆயினும், அவரோ முதல்தரமான ராஜீயவாதி; மெச்சத் தகுந்த தகுதி வாய்ந்தவர். பிறர் உதவியின்றி உச்சஸ்தானம் அடைந்தவர். ஆதியில் ஆசிரியராகவும், அப்பால் பத்திராசிரியராகவும் இருந்தவர். பின்பு வக்கீல் தொழிலில் பிரபலம் பெற்றவர். ஐக்கிய மாகாண சட்டசபையில் அங்கம் வகித்து, அரிய ஊழியம் புரிந்தவர். கல்வியறிவில் இணையில்லாதவர்! ராஜீய வாதிகளிலே அவரை மிதவாதி என்பர். வங்க சிங்கம் பாபு சுரேந்த்ர நாத பானர்ஜிக்கு அடுத்தபடி பிரசங்கபானு பண்டித மாளவ்யாவே.''

அக்காலத்தில் தேசத்திலே கொந்தளிப்பு மிகுதி. ராஜீயவாதிகளுக்குள் கட்சிப் பிரதிகட்சி. தீவிர வாதிகள் விலகி நின்றனர். இரத்தத் துடிப்புள்ள வாலிபர் துள்ளி எழுந்தனர். அதிகாரிகளோ அடக்கு முறைகளை மேற்கொண்டனர். வாலிபர் ஒரு புறம், அதிகாரிகள் ஒரு புறமாக ஆர்ப்பரிக்க, ஹிம்ஸை ஓங்கியது. கொள்ளைகளும் கொலைகளும் நடந்தன. அதிகார மிடுக்கு தலைமிஞ்சி

கின்றது. அதுகண்ட பண்டிதர் அப்போதே அஹிம்ஸா போதம் புரிந்தார்.

அஹிம்ஸையை ஒரு கொள்கையாக மகாத்மா பரப்பினூர் என்பது மெய்யே. ஆயினும், அக் கொள்கை புதியதன்று; ஆரிய மதத்தின் அரிய கோட்பாடாகும். புராண இதிகாச சாஸ்திர நூல் களிலிருந்து பண்டிதர் மேற்கோள் காட்டினூர்; அஹிம்ஸை பாரத பூமிக்கு இயற்கையான பெருங் குணம் என்றூர்; அநாகரிக அஹிம்ஸை ஐரோப்பா வின் இயற்கையென எடுத்துக் காட்டினூர். மேனூட்டு ஹிம்ஸைக் கொள்கையை மேற்கொள்ளுதல் மதி மோசம் என்று வற்புறுத்தினூர். மக்களுக்கு மட்டு மன்று, அரசாங்கத்துக்கும் அடக்குமுறையை விடுத்து, அன்பு முறையைக் கடைப்பிடித்து, மக்களை அணைத்து, ஆதரிக்கவேண்டும் என்று நன்மதியும் புகட்டினூர்.

---

## 9. சுதர்ம – சுதேசியம்

சுதர்மம் சுதேசியம் இரண்டும் ஒன்றே. சொந்த தேசத்திற் குரிய நடையும் உடையும், வாழ்வும் கல்வியும் கொள்வதே சுதர்மம் அல்லது சுதேசியம். அன்னிய ஆட்சியும் நாகரிகமும் தோன்றலாயின, சுதர்மமும் சுதேசியமும் பறந்துவிட்டன. பரதர்மத்திலே பல ரும் பித்துக்கொண்டனர். பெரியோர் இட்ட செல் வப் பெயரையும் மாற்றிக்கொள்ள அநேகர் மனங்

கொண்டனர் ; பரதேசப் பெயர்களைச் சூடிக்கொள்ளவும் சொக்கி நின்றனர். வேறு என்னவேண்டும்!

பிறந்த நாள் தொட்டு நமது பண்டிதர் சுதர்மி; சுதேசியவாதி. சட்டைக்குப் பொத்தானும் போடார்; கயிறுகொண்டே கட்டிக்கொள்வார். திலக மகா ராஜனும் அப்படித்தான். மக்களிலே பலரும் சுதேசியத்தைக் கைவிட்டமை கண்டு, மதியூகிகள் மாழ்கினர் ; சுதேசியத்தைப் பரப்ப முனைந்தனர். அத்தகைய புருஷரில் ஒருவர் பண்டித மாளவியா. சுதேசத் தொழில்களை ஆதரிக்கும் நோக்குடன் அலகபாத் நகரிலே (1881-ஆம் ஆண்டில்) ஒரு வர்த்தகசாலை ஏற்பட்டது. அச்சாலையின் மூல புருஷரில் ஒருவர் மதன் மோகன். அவ்விதம் தேசத்திலே இரண்டோர் இடங்களில் சுதேச பண்டசாலைகள் தோன்றின. ஒன்றிரண்டு எந்த மூலை? கடலின் ஒரு துளி நீருக்கே நிகர்.

முன்னம் இங்கே ராஜப்பிரதிநிதியாக இருந்த ஒருவர் லார்டு **கர்ஸன்**. வங்காள மாகாணத்தை அவர் இரண்டாக்கினர். வங்காளிகளையே அது இரண்டாகப் பிரிப்பதாம். அதுகண்ட வங்காளியர் வெகுண்டெழுந்தனர். சுதேசிய விரதம் பூண்டனர்; சுதர்ம சபதம் கொண்டனர் ; பகிஷ்கார கோஷம் செய்தனர்; பரதேச சம்பந்தமான எதையும் விலக்க முற்பட்டனர்! அக்கிளர்ச்சி, இரண்டு ஆண்டினுக்குள் வடக்கே இமயம் முதல், தெற்கே குமரி வரையில் பரவியது. **சுதேசியம், சுதர்மம், பகிஷ்காரம், சுயராஜ்யம்**

எனும் தேசீய மந்திர வசனம் - ராஜீயப் போர் வாசகம் பலரையும் கவர்ந்தது.

நகம் முளைத்த நாள்முதல், மாளவியா சுதர்மி அல்லவா? சுதேசியத்துக்கு அவர் ஆசி கூறினர். அப்போது அவர் பேசிய பேச்சு இது :—"தேர்ந்த நெசவாளர் எங்கே? பலவகைத் தொழில்கள் தெரிந்த பண்பாளர் எங்கே? ஆண்டுதோறும் இங்கிலாந்துக்கும் இதர தேசங்களுக்கும் சென்ற சரக்குகள் எங்கே? எல்லாம் — அந்தோ! — பழங் கதையாகிவிட்டதே! எனக்கு முன்னே இச்சபையில் (காங்கிரஸ் மகாசபையில்) இருப்போர் அனைவரும் ஆங்கில மயமாகக் காண்கின்றனரே! எங்கே போனலும் பிரிட்டிஷ் சாமான்கள்! பிரிட்டிஷ் சரக்குகள்! பிரிட்டிஷ் மயம்! ஜனங்களுக்கு என்ன மிச்சம்? அரை வயிறு, கால் வயிறுடன் காலந் தள்ளும் சங்கட வாழ்வுதான். உத்தியோகங்களிலாகட்டும், வர்த்தகத்திலாகட்டும், தொழிலிலாகட்டும், நூறில் ஒரு பங்குகூட நம்மவருக்கு இல்லையே. இந்நிலையில் சுக வாழ்வு ஏது? சந்தோஷம் என்பதும் ஏது?

"நாட்டுச் சரக்கும் சாமானும் விலை அதிகந் தான். அவ்வளவு நேர்த்தியாகவும் இரா. ஆயினும் என்ன? காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு அன்றோ? பரதேச சாமான்களை வாங்கின், தேசச் செல்வம் வறண்டுபோம்; தொழில்கள் நசிக்கும், வறுமை பரவும். பிழைப்பு இராது, மரணம் மிகும்."

"ஆதலின், அனைவரும் சுதேச சாமான்களையே வாங்கவேண்டும்'' என்று வற்புறுத்த ஆண்டு தோறும் தொழில் மகாநாடு நடத்த ஏற்பாடு செய்தார்; தொழில் காட்சிச் சாலைகள் அமைக்கவும் முயன்றார்; சுருங்கச் சொல்லின், சுதேசிய மந்திரமே சதா ஜபித்து வந்தார். இன்னும் அப்படித்தான். பிரயாகை சர்க்கரைச் சாலை அவரது தொழில் முயற்சியின் ஆதி சின்னம்!

---

## 10. விரோதியா?

**பண்டித மதன் மோகன் மாளவ்யா சமய துரந்தரர்;** விழுமிய வேதவித்து; சாஸ்திர விதிகளிலிருந்து இம்மியும் தவறார்; பரான்னம் கொள்ளார். வெளி ஊர்களுக்குச் சென்றால், தமது சமையல்காரனைக் கூட்டிச் செல்வார்; இல்லையேல் தாமே சமைத்துப் புசிப்பார். வட்ட மேஜை மகாநாட்டிற்காக இங்கிலாந்துக்குச் சென்ற காலையில், கங்காநீரும் மண்ணுங்கொண்டு சென்றார்.

ஹிந்து சமூகத்தை வன்மையாக்கி, ஆரிய தர்மத்தை நன்கு பாதுகாக்க, **ஹிந்து மகா சபை** என ஒரு சபை அவர் கண்டுளார். இருபது ஆண்டுகளாக ஹிந்து சமூகத்துக்கு அம் மகா சபை பேருழியம் புரிந்து வருகின்றது. இவற்றை எல்லாம் மதித்து, அவர் "முஸல்மான்களின் விரோதி'' என்று சிலர் எண்ணிக் கிடக்கின்றனர். அவருடன் நெருங்கிப் பழகியோர் அவ்விதம் தப்

பெண்ணம் கொள்ளார். உதாரணமாக, மைசூர் திவான் **ஸர் மீர்ஸா இஸ்மெய்ல்** முகம்மதியப் பெருமகன். மாளவியாவைக் குறித்து அவர் புகன்றிருப்பது ஈதாகும்:—

“காசி ஹிந்து சர்வ கலாசாலை சம்பந்தமாய் மைசூர் ராஜ்யத்தின் உதவியை நாடி, மாளவ்யா இருமுறை மைசூர் வந்துபோனர். அதற்கு முன்னம் அவரை நான் நேரில் கண்டதில்லை; அவரது இணையிலா தேச சேவையைக் குறித்து எனக்குக் கேள்வி உண்டு. அவரை முஸ்லிமான்களின் விரோதி எனச் சிலர் சொல்லி வந்தனர். அவருடன் நான் பேசியிருந்தேன். அதன் பலனாக நான் கண்டுகொண்டது யாது? முஸல்மான்களின் விரோதி என அவரை அழைத்தல் பெரும் பிழை என்பதாம். அவரோ தேசபக்தியின் வடிவம். பாரத புத்திரன் என்றே அவர் தம்மை எண்ணியிருக்கிறார். அவரது அடக்க ஒடுக்கம், தன்னலத் தியாகம், பெருமிதம், சன்மார்க்கம் இவை கண்டு நான் பிரமிப்புக் கொண்டேன், போற்றவும் செய்தேன். நெடுங்காலம் அவர் சுக ஜீவியாக வாழ்வாராக!”

முகம்மதியரைக் குறித்து மனத்தகத்தும் அவருக்கு வெறுப்போ விரோதமோ கிடையாது. ஹிந்துக்கள், முகம்மதியர் இருவரும் இரு கண்களே போல் துலங்கவேண்டும். இதுவே அவர் கொள்கை. அவருடன் பேசியிருந்தவர்களில் எவரும் அவரை

முஸ்லிம்களின் விரோதி என மொழியார். அசத்திய மும் அநீதியும் காணின், அவர் சகியார். ஈ எறும்புக் கும் அவர் தீங்கு நினையார். இங்ஙிலையில், மனிதர் களுக்கோ அதிலும் ஒரு வகுப்பாருக்கோ அவர் தீமை நினைப்பார் அல்லது இழைப்பார் என்று சொல்லுதல் அடுக்குமோ? முகம்மதியரின் உரிமை விஷயமாய் நியாயமாக நடக்கவேண்டு மென்பதே அவர் கருத்து. ஆனல் வரம்பு மீறி, அவர்கள் விரும் புவதை எல்லாம் அளிக்க அவர் ஒருப்படார். வரம்பு கடந்து அவர்களிடம் பெருந்தன்மை கொள் ளவும் அவர் கருதார். இந்து-முஸ்லிம் பிணக்கு சமரஸமாகத் தீரவேண்டியதே. அதற்கு சத்தியமும் தர்மமுமே அடிப்படை ஆதல்வேண்டும் என்பதே அவர் கோட்பாடு. உருது பாஷையில் அவருக்கு அபாரப் பயிற்சி உண்டு என்பதை இச் சந்தர்ப்பத் தில் குறிப்பிடலாகும்.

---

## 11. ஹிந்து மகா சபை

ஹிந்து மகாசபை என்பது ஹிந்துக்களைப் பலவழிகளி லும் கைதூக்கி விடுவதையே நோக்கமாகக் கொண்ட சபை. அம்மகாசபை தோன்றி, இருபது ஆண்டுகள் ஆகின்றன. ஹிந்துக்களல்லாத முகம் மதியர், பார்சியர், கிறிஸ்தவர், சீக்கியர்முதலிய அனை வரையும் சோதரரேபோல் பாவித்தலும் அதன் கருத்து. ஹிந்துக்களிலே பற்பல வகுப்பினரும் பிரி வினரும் இருக்கின்றனர். அவர்கள் அனைவரையும்

அன்புநார் கொண்டு பிணிக்கவே அம் மகாசபை பாடுபடுகின்றது. பிற சமூகத்தினரிடம் அதற்கு வெறுப்பு என்பது எள்ளளவும் கிடையாது. ஹிந்து மதமோ அஹிம்ஸையை அடிப்படையாகக்கொண்டதல்லவா? இந்நிலையில் மற்ற வகுப்பினருக்குத் தீங்கு நினைக்க அம்மகாசபை மனம் கொள்ளுமோ?

ஹிந்துக்களின் புராதனமான சமய உயர்வு, கலைஞானம், நாகரிகத் தேர்ச்சி இவற்றைக் காக்க வேண்டும் என்று அம் மகா சபை கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறது. ஹிந்துக்கள் வலுவற்று, ஒற்றுமை இன்றி, உயர்வு இழந்து, கோழைகளாய்க் கிடப்பது கண்டு மாளவியா மனம் பொறுக்கவில்லை. ஆனதுபற்றியே அம் மகா சபையைத் தோற்றுவித்தார். ஹிந்துக்கள் வன்மை கொண்டாலன்றி, சமூகத்தைக் காக்கவும், சுயராஜ்யம் எய்தவும் எங்ஙனம் இயலும்? சுயராஜ்யம் எய்தினும் அதனைக் காத்தலும் எவ்வாறு? ஏனைய சமூகத்தினரும் உயர்வை நாடி ஒற்றுமை கொள்ளவேண்டும் என்று மாளவ்யா விரும்புவார். அம் மகாசபையைக் குறித்து அவர் பேசியிருப்பதை இங்கே குறிப்பிடுவோம்.

“ஹிந்து சமயத்தில் ஆசிரமங்களை நான்காக வகுத்திருத்தல் பெருமைக்கும் மகிமைக்கும் காரணமாம். பிரம்மசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி இந்நான்கு ஆசிரமத்தினரும் சரிவர நடப்பின், உலகம் உய்யும்; சமூகம் சீர்பெறும்; நல

பலங்களும் பெருகும். கருணையும் கண்ணியமுமே ஹிந்து மதத்தின் உயர்வுக்கு அடையாளம். டில்லிமா நகரிலே கடைசியாக ஹிந்து சக்கரவர்த்தியாய் விளங்கிய பிருதிவிராஜன் என்பான் போர் முனையிலே **முகம்மது கோரியைச்** சிறை செய்தும் விடுவித்தான். யாரையும் துன்புறுத்தக்கூடாது என்பதே ஹிந்து சமயத்தின் உயர் நோக்காம்; பிறரால் துன்பம் எய்தக்கூடாது என்பதையும் நாம் மறத்தற்கு முடியாது. நாம் வன்மையாளராக விளங்குவோமாக.

"ராஜ்யாதிகாரத்தை நமது சமயம் ஒருபொருட்டாக மதித்ததில்லை; உயர் தர்மத்தையே அது உயிர் நிலையாகக்கொண்டது. ஆங்கிலேயர் இங்கே தோன்றுவதற்கு முன்னம், ஹிந்துக்களும் சரி, முகம்மதியரும் சரி, உயர் நிலையிலிருந்து தவறி, ஒருவரோடு ஒருவர் போர் புரிந்தனர். இந்நிலையில், ஆங்கிலேயர் தோன்றி சுயநலமும் லாபமும் கருதி அரசாளத் தொடங்கினர். ஆங்கில ஆட்சியினால் கொஞ்சம் நன்மைகளும் உண்டு. 1885-ம் ஆண்டு முதல் இன்றளவும் இந்தியாவின் உயர்வுக்காக காங்கிரஸ் மகா சபை மிகவும் பாடுபட்டு வருகின்றது. ஒரு சில பெருமக்களைத் தவிர முகம்மதிய சமூகம் (அக் காங்கிரஸ்) மகா சபையில் சேராமல் விலகி நிற்கின்றது.

"1916-ஆம் ஆண்டிலே அனைவரும் சேர்ந்து, சீர்திருத்தம் வேண்டினோம்; சிறிதளவு கிடைத்தது. கிடைத்தும் என்ன? அரசாங்கத்தின் பான்மை கண்டு, இந்தியர் மனம் புண்கொண்டுளது; நமது

தொழிலும் வியாபாரமும் நசித்துள; வர்த்தகரும் தொழிலரசரும் வலுவற்றுக் கிடக்கின்றனர். நமது நிலையோ மிகவும் பரிதாபகரமானது. ஆதியிலே அரசாங்கத்திற்கு நம்மைக் கண்டு சற்றே அச்சம் இருந்தது. மகாத்மா தோன்றி அஹிம்ஸா தர்மத்தைப் பரப்பினர். அரசாங்கத்தின் பான்மை அடியோடு மாறிவிட்டது. இந்நிலையில் ஹிந்து மகா சபையினரான நாம், இந்த அரசாங்கம், முகம்மதியர், பார்சியர் முதலியோரிடம் எத்தகைய பான்மை கொள்ளவேண்டும் என்று ஆலோசித்து ஒரு முடிவு செய்தல் வேண்டும்.

“ஹிந்து—முஸ்லிம் விஷயமோ துக்ககரமான ஒன்ருகும். வங்காளப் பிரிவினையின் காலத்திலே ஹிந்துக்களின்மீது முகம்மதியர் தூண்டிவிடப்பட்டனர். அக்காலம், நிகழ்ந்த கொடுமைகளோ கூறும் தரமல்ல. நமது மாதர், மதம், ஆலயம், விக்கிரகம் இவைகளுக்குப் பங்கம் நேரலாமோ? நேருங் காலையில் நாம் கைகட்டி வாய்மூடி நிற்பதோ?

“அகிலம் வல்ல ஆண்டவன் அறிய உரைக்கின்றேன். முகம்மதியருக்குத் தீங்கு இழைக்க ஒருபோதும் எண்ணியதில்லை; எண்ணவும் மாட்டேன். முகம்மதியரை நசுக்கி ஹிந்துக்கள் மேன்மை பெறவும் மனங்கொள்ளேன். முகம்மதியருக்குத் தீமை புரிய நான் நினைக்கின், ஆண்டவன் எனக்குக் கடுந் தண்டனை கொடுக்கட்டும். இச்சமயத்தில் ஒரு வார்த்தை. தங்களது சோதரிகள், தாய்மார்கள்

மனைவியர், இவர்களைக் காத்துக்கொள்ளவும், மத உயர்வைப் பாதுகாக்கவும், ஹிந்துக்களால் முடியவில்லையானால் ஹிந்துக்கள் ஒரேயடியாக ஒழிந்து பூண்டற்றுப்போதலே மேலாம். நமது கோழைத் தனத்துக்கும் வலுக்குறைவுக்கும் நாமே காரணம். நமது கடமையை நாம் மறந்துவிட்டோம். ஹிந்துக்கள் என்று சொல்லிக்கொள்ள வெட்கமேன்? ஹிந்துக்களுக்குத் துன்பம் நேரின், முகம்மதியத் தலைவர்களைக் கண்டு பேசி சமரசத்திற்கு வழி தேட வேண்டும். கலகம் ஏற்பட்டால், இரு வகுப்புத் தலைவர்களும் சேர்ந்து அதனைத் தடுக்கவேண்டும்.''

---

## 12. சாரமான சிறுரை

பேசப் புகுந்தால் பலருக்கு உதடே பேசும்: சிலருக்கோ உள்ளமே பேசும். உள்ளமொத்துப் பேசுபவர் நமது பண்டிதர். அவரது பேச்சில் பெரும் பொருள் பார்க்கலாம்; கம்பீரமும் கருணையும் காணலாம்; அன்பும் ஆர்வமும் அறியலாம். ஒவ்வொரு சொல்லும் பசுமரத்தாணிபோல் பதியும். சென்ற ஐம்பது ஆண்டுகளாக அவர் பேசியது இராமாயணம் பாரதமாக விரியும்.

பண்டிதர் பேச எழுந்தால் பகைவரும் பரவசமாகி நிற்பர். உள்ளங் கலந்த உரைக்கு அஃதே அத்தாட்சி. ஆத்திரம் என்பது அவரிடம் தலைகாட்டாது. சாந்தமும் அமைதியும் வாய்ந்த சொற்களே புறப்படும்; ஆயினும் அவை அழுத்தம் திருத்தமாக

இருக்கும். அளந்து பேசுவதென்பதை அவரிடமே பார்க்க முடியும். அத்தகைய உரைகளில் சில இவை:

**வீண் பெருமை:**—"இந்தியாவின் நலத்தைக் காக்கும் கடமை இங்கிலாந்துக்குளது. அக்கடமையை அது தானுகச் செய்வதுமில்லை; நம்மையும் செய்ய விடுவதில்லை. இந்நிலையில் இந்தியாவில் இந்தியாவின் நலத்தைக் கவனிப்பது யார்? இதைவிடக் கொடுமை அல்லது அநியாயம் உண்டா? சுதந்திரத்தில் அபிமானமுண்டு, நியாயத்தில் பற்றுண்டு, சுயேச்சையான அரசியலுக்கு மூலஸ்தானம் என்று ஆங்கில ஜாதியார் பெருமை பேசுகின்றனரே இதில் அர்த்தமுண்டா"? (1887).

**போய் வாக்கா?:**—"தனக்குரிய நேர்த்தியான வாசகத்தில் ராஜ விளம்பரத்தை லார்டு டர்பி வரையவேண்டும் என்பது ராணியின் விருப்பம். இரத்தக் களரிக்கு இடமான ஜனக்கலகம் நடந்த பின்பு, இந்தியாவின் ஆட்சியை ஏற்றுக்கொள்ளுகிறேம். மேலும் கோடிக்கணக்கான மக்களின் நலங் கருதி ராணி பேசுகிறுள். இவற்றையும் மனத்தில் கொண்டு, ராஜ விளம்பரத்தை வரைதல் வேண்டும். காரியத்தில் காட்டவேண்டிய வாக்குறுதியே செய்கிறேம். அரசியலின் லட்சியத்தையும் அறிவிக்கிறேம். ஆதலின் அந்த விளம்பரத்தில் தாராள சிந்தை, அன்பு, அபிமானம், சமய சமரஸம் இவை ததும்பவேண்டும். இதர மக்களைப் போல்

சரி சமமான அந்தஸ்து இந்தியருக்கும் கிடைக்கும் என்பது தெளிவாக வேண்டும்.'' இவ்விதம் விக்டோரியா மகாராணி வாக்குறுதி தந்திருக்க, அதன்படி காரியம் உண்டா? இல்லை. இம்மட்டோ? காரியத்தில் காட்டவேண்டும் என்னும் கருத்துடனா ராணி பேசினுள் என்றும் பெரிய பேர்வழிகள் பேசுகின்றனர். (1888.)

**சேனைச் செலவு:**—சர்க்காரின் செலவைப் பார்த்தால் திகைப்பு ஏற்படும். 1857-ஆம் ஆண்டிலே போர்ச் சேவகர் இரண்டரை லட்சம் பேர். அப்போது ராணுவச் செலவு 115 லட்சம் பவுன். 1889-ஆம் வருஷத்திலோ, போர்ச் சேவகரில் அரை லட்சம் பேர் குறைவு. சேனைச் செலவோ 200 லட்சம் பவுன்! இந்த அதிகச் செலவுக்கு என்ன வகை செய்கின்றனர் தெரியுமா? உப்பு வரியை உயர்த்துகின்றனர், மண் எண்ணெய் வரியையும் உயர்த்துகின்றனர். மக்களின் நிலை யாதாகின்றது? பசி வந்து வயிற்றைக் கிள்ளுகின்றது. பஞ்சம் வந்து உயிரைக் கொண்டுபோய் விடுகின்றது. (1889.)

**புல்லுக்கும் மோசம்:**—அயோத்தியிலே பல்லாயிரக்கணக்கான உழவர்களின் நிலைமை என்ன தெரியுமா? அங்கே குளிர் தாங்க முடியாது. கையும் காலும் விரைத்துப் போம். இந்நிலையில் தங்கள் மேல் உடம்பையோ, குழந்தை குட்டிகளின் மேல் உடம்பையோ மூடிக்கொள்ள அவர்களுக்

குத் துணி கிடையாது. இவ்வளவுதானே? குளிர் அதிகரித்து விட்டால், இரவிலே தங்களையும் சரி, தங்கள் மனைவி மக்களையும் சரி, புல்லைப் போட்டு மூடிக்கொள்வார்கள். இன்னும் குளிர் அதிகரிக்கையில், தூக்கம் பறந்துபோம். அப்போது அப் புல்லைக் கொளுத்திக் குளிர் காய்வார்கள். அப் புல்லுக்கும் வந்துவிடும் மோசம். அதிகாரிகள் சுற்றுப் பிரயாணம் வந்தால், அவர்களின் ஆடு மாடுகளுக்குப் போய்விடும் அந்தப் புல்லும். மக்களின் நிலைமை இது. அவர்களின் வரியில் முக்கால் ரூபாய் உயர்த்தினால், பிரமாதமான கஷ்டம் நேராது என்று சொல்வோர் ராஜப்பிரதிநிதியின் சபையில் இருக்கின்றனர். (1890.)

**தோல் சிவப்பு:**—வருஷந்தோறும் ஸிவில் ஸர்விஸ் உத்தியோகச் செலவு 140 லட்சம் பவுன். இதில் மூன்றில் இரண்டு பங்கு ஐரோப்பியருக்கு. இந்தியருக்கோ மூன்றில் ஒரு பங்குதான். ராணுவத்திலும் பெரிய பெரிய பதவிகளெல்லாம் ஐரோப்பியருக்குத்தான். இந்தியரைவிட அவர்களுக்குத் தகுதி அதிகமா? இல்லை. வீரம் அதிகமா? இல்லை. போர் வன்மைதான் அதிகமா? இல்லை. பின், என்ன காரணம்? அவர்களின் தோல் சிவப்பு! வேறில்லை. மக்கள் இல்லாது போனால் அரசாங்கம் ஏது? மக்கள் வரவர ஏழைகளாகிக்கொண்டே போனால், அரசாங்கம் எங்கே இருக்க முடியும்? இருந்தாலும் அரசாங்கம் என்ற பெயர் எப்படிப் பொருந்தும்? (1891.)

முக்காலே அரைக்கால்:—வருஷத்துக்கு ஐயாயிரம் முதல் பத்தாயிரம் வரையில் சம்பளம் வாங்கும் ஐரோப்பியர் 1207; சட்டைக்காரர் 96; இந்தியர் 421. அம்மூவரும் முறையே வாங்கும் மொத்த சம்பளம் 88 லட்சம்; 6 லட்சம்; 29 லட்சம்!

வருஷத்துக்கு 10 ஆயிரம் முதல், 20 ஆயிரம் வரையில் சம்பளம் வாங்கும் ஐரோப்பியர் 713; சட்டைக்காரர் 8; இந்தியர் 45. அம்மூவரில் ஐரோப்பியரின் மொத்தச் சம்பளம் 97 லட்சம்; சட்டைக்காரர் 1 லட்சம்; இந்தியர் 5 லட்சம்!

வருஷத்துக்கு 20 ஆயிரம் முதல், 30 ஆயிரம் வரையில் சம்பளம் வாங்கும் ஐரோப்பியர் 300; சட்டைக்காரர் 2; இந்தியர் 4; ஐரோப்பியரின் மொத்தச் சம்பளம் 72 லட்சம்; சட்டைக்காரர் அரை லட்சம்; இந்தியர் முக்காலே அரைக்கால் லட்சம்.

இந்தப் புள்ளி விவரம் ஸிவில் ஸர்விஸ் உத்தியோகத்தைப் பற்றியது. ராணுவத்தைப்பற்றிய புள்ளியோ பேசத்தரமன்று. (1892.)

பசிப்பிணி:—தரித்திர தேசம் என்பதற்கு ஆதாரம் காட்டவேண்டுமாம். இக்கிலாந்திலிருந்து இங்கு வந்து பார்ப்பார்களா? ஆண்டவனிடம் நம்பிக்கை உண்டா? ஒரு நாள் அக்கடவுள் முன்னிலையில் நிற்கவேண்டும் என்ற எண்ணம் உண்டா? உண்டாயின் இங்கே வரட்டும், கிராமம் கிராமமாகப் போய் பார்க்கட்டும். மக்களின் வறுமையைக் கண்டுகொள்ளலாம். தேர்ந்த நெசவாளர் எங்கே? பற்பல

விதமான தொழிலாளர் எங்கே? ஆண்டுதோறும் அயல் தேசங்களுக்கு ஏராளமாகச் சென்ற சரக்குகள் எங்கே? எல்லாம் பழங்கதையாகிவிட்டதே. இம் மகாசபையில் காங்கிரசில் வீற்றிருப்போர் அனைவரும் சீமைத்துணியே தரித்துளர். எங்கே பார்த்தாலும் ஆங்கில சாமான்கள்தான். ஒரு புள்ளிபாருங்கள். உலகிலே 1793-ஆம் வருஷம் முதல், 1890-ஆம் வருஷம் வரையில் யுத்தங் காரணமாக நேர்ந்த உயிர்ச் சேதம் 45 லட்சம். எட்டு வருஷத்தில் இந்தியாவில் ஜுரத்தால் மட்டும் மாண்டோர் 43½ லட்சம்பேர். எனவே லட்சோப லட்சம் ஜனங்கள் பசியால் மடிகின்றனர் என்பது வெளிப்படை அல்லவா? (1893.)

குற்றச் சாட்டு:—அனுவசியமாய், அதிகச் செலவுக்கு இடமான ஸிவில் ஸர்விஸ் எனும் உத்தியோக வருக்கத்தை நம் தலைமீது கட்டிவிட்டனர் என்று இங்கிலாந்தின்மீது குற்றம் சாட்டுகிறோம். நாம் நசுங்கிப் போய்விடும்படியான கனத்த ராணுவச் செலவை நம்மீது சுமத்தியுளர் என்றும் குற்றம் சாட்டுகிறோம். இந்தியாவின் பணத்தை இந்தியாவுக்கு வெளியே வீண் விரயமாக்குகின்றனர் என்றும் குற்றம் சாட்டுகின்றோம். இந்தியாவின் விஷயத்தில் நேர்மையாக நடக்கவில்லையென்றும் குற்றம் சாட்டுகிறோம். தங்களுடைய கடமையைச் சரிவர நிறைவேற்றாததனால், லட்சோபலட்சம் ஜனங்

கள் மாண்டு போகும்படி செய்து விட்டனரென்றும் குற்றம் சாட்டுகிறோம். இக் குற்றச்சாட்டு சாமானியம் அன்று. இலேசாகவும் சொல்லிவிட வில்லை (1895.)

**அங்கும் இங்கும்:**—இந்தியத் துணிகள் இங்கிலாந்தில் குவிகின்றனவே என்று **டேனியல்** என்பான் கூக்குரல் போட்டான். ஒருவன் மந்திரி சபையிலே, ஆங்கில நெசவாளருக்குப் பிழைப்பு இல்லாது போகிறதே என்று ஓலமிட்டான். உடனே இந்தியத் துணி இங்கிலாந்தில் தலைகாட்ட முடியவில்லை. தொழிலபிவிருத்தி இல்லாது போனால், உலகிலே இங்கிலாந்துக்கு நல்ல நிலைமை ஏது? அவ்விதம் இந்தியத் தொழிலை அபிவிருத்தி செய்ய முடியாதா? (1896.)

**செல்வக் கொள்ளை:**—மக்களின் நிலைமை மகா மோசம். லட்சோப லட்சம் ஜனங்கள் பஞ்சத்தால் மாள்கின்றனர்; லட்சோப லட்சம் ஜனங்கள் பிளேக் நோய்க்கு இரையாகின்றனர். லட்சோப லட்சம் ஜனங்கள் பூரண வளர்ச்சி அடைவதில்லை. மற்று, கொஞ்சம் கொஞ்சமாக வாடி வதங்கி மடிந்து போகின்றனர். மக்களின் நிலைமை இது. பஞ்சத்தினால் ஜனங்கள் மடியாமல் தடுக்கலாம்; பிளேக்கினால் ஜனங்கள் சாகாமல் காக்கலாம். பஞ்சத்தினாலும் பிணியினாலும் பலர் மரிப்பதற்கு மூலகாரணம் வறுமைதான். ஏராளமான பணம் சம்பள

மாகவும் பென்ஷனுகவும் தேசத்தைவிட்டுப் போய் விடுகிறது. வியாபார மூலம் இன்னும் வெகு பணம் போய்விடுகிறது. இவற்றின் பலன் யாது? வறுமை; பிழைப்பில்லாத் தன்மை. சுதேசியத்தை மேற்கொண்டால், செல்வக் கொள்ளை நிற்கும்; மக்களுக்குப் பிழைப்புக் கிடைக்கும். ஆதலின் முதக் கடமையாக சுதேசியத்தை மேற்கொள்ள வேண்டும். (1906)

**ராஜதர்மம்** :—நாகரிகமுள்ள அரசாங்கத்தின் கடமை யாது? பசியும் பிணியும் இல்லாமல் மக்களைக் காப்பதாம். நமது மூதாதையர் என்ன சொல்லியுளர்? பசி, பிணி, வறுமை முதலியவற்றினின்று மக்களைக் காத்தல் அரசன் கடமை என்று **ஆபஸ்தம்பர்** கூறுகிறுர். யுதிஷ்டிரருக்கு நாரதர் கூறியது யாது? நெருப்பு, பாம்பு, வியாதி, தீமை இவை நேராமல் ராஜ்யபாரம் வகிக்கிருயா என்பதாம். ஐக்கிய மாகாணங்களிலே தற்பொழுது பஞ்சமும் கொள்ளை நோயும் தாண்டவம் ஆடுகின்றன. பிளேக் நோயினுல் நேரும் மரணமோ அபாரம். அதன் கொடுமை மகா பயங்கரம். மக்களைக் காக்க வகை இல்லையா? (1906.)

**தேய்வப் பணி** :—முடிவாக ஒரு வார்த்தை. தீர்மானம் செய்துவிட்டால் போதாது. தேசமெங்கும் சங்கங்கள் காணவேண்டும். வருஷ முழுதும் வேலை செய்யவேண்டும். எல்லா விஷயங்களையும் குறித்து

மகா ஜனங்களுக்கு எடுத்துரைக்க வேண்டும். சுகா தாரத்தை வளர்க்கவும், கல்வியைப் பரப்பவும், தொழிலைப் பெருக்கவும் தனித்தனி சங்கங்கள் அவசியம். இம்மட்டோ? கூட்டுறவு முயற்சியை ஓங்கச் செய்யவேண்டும். மத்தியஸ்த முறையைப் பிரபலமாக்க வேண்டும். தேகாப்பியாச ஞானத்தை நிலைநாட்டவேண்டும்.

மக்கள் அனைவரும் சுகமே வாழவேண்டும் என்பதே நமது நோக்கம். புருஷார்த்தம் பெருகுவதால் மட்டும் சுகவாழ்வு ஏற்பட்டு விடாது. மனிதனுக்கு மனிதன் பயன்படவேண்டும் எனும் மத போதம் கொள்ளுதலே முக்கியம். எந்த வேலை செய்யினும் சரி, மதக்கடமை என்றே ஆற்றவேண்டும். மதக்கடமை என்று மதியாமல் போயின், நமது உழைப்பெல்லாம் வியர்த்தமாகும். ஆண்டவனைக் காணும் இடம் எது? ஆண்டவன் படைப்பான மனித சமூகமே! ஏழை மக்களிடம், எல்லாம் வல்ல ஈசனைக் காணுதல் வேண்டும். அந்த ஏழை மக்களுக்குப் பணி செய்வதே ஆண்டவனுக்குப் பணி செய்வதாம்.

அத்தகைய தெய்வப் பணி செய்கையில், நன்மை நேரினும் சரி, தீமை நிகழினும் சரி, பிறர் உதவி புரியினும் சரி, இடுக்கண் செய்யினும் சரி, தெய்வப் பணியின் பெருமிதத்தை நினைக்க நினைக்க, மெய் வருத்தம் தோன்றாது, மனச் சலிப்பும் உதிக்காது.

காரியம் கைகூடும் வரையில் கருமத்தில் கண்ணு யிருப்போம். மக்களின் க்ஷேமலாபந்தானே நமது லட்சியம்? சுயநலம் அல்லவே. ஆண்டவனிடம் எனக்குப் பரம நம்பிக்கை உண்டு. நம்பிக்கை யுடன் காரியம் செய்கையில், கடவுள் அருள் புரி வார்; காரிய சித்தி உண்டாகும். ஆதலின் அனை வரும் அப்படி உழைத்து, உயர்வு எய்துவோமாக! (1908.)

**விபரீத வேற்றுமை:**—ஓட்டுரிமையில் என்ன வேற் றுமை இது? மூவாயிரம் ரூபாய்க்கு வருமான வரி யோ, மூவாயிரம் நிலவரியோ கொடுக்கும் முகம்மதி யருக்கு ஓட்டுரிமை உளது; மேலும், கலாசாலைப் பட்டம் பெற்று ஐந்தாண்டு ஆகிவிட்ட எல்லா முகம் மதியருக்கும் ஓட்டுரிமையாம்! நல்லது. முகம்மதி யருக்கு அவ்விதம் உரிமை கிடைத்ததுபற்றி எனக்கு வருத்தமில்லை. மிக்க சந்தோஷமே. முகம்மதிய ரல்லாதாரின் நிலைமை யாது? பாருங்கள். மூன்று லட்சத்துக்கு வருமான வரியோ, மூன்று லட்சம் நில வரியோ கொடுக்கும் எந்த ஹிந்துவுக்கும் சரி, பார் ஸியருக்கும் சரி, கிறிஸ்தவருக்கும் சரி, ஓட்டுரிமை கிடையாது. கலாசாலைப் பட்டம் பெற்று முப்ப தாண்டு ஆகிவிட்டபோதிலும் எந்த பார்ஸிய, கிறிஸ்தவ பட்டதாரிக்கும் ஓட்டுரிமை இல்லை.

ஸர் குருதாஸ் பானர்ஜி, டாக்டர் பந்தர்க்கார், ஸர். சுப்பிரமணிய ஐயர், டாக்டர் ராஷ் விகாரி

கோஷ் முதலிய பெரியார்கள் ஓட்டுரிமை பெற்றவர்; வயதாகிவிட்டவர்கள் அவ் வேற்றுமை கண்டு வருந்தார். இளைஞராய் முகம்மதியரல்லாத பட்டதாரிகள் பதினுயிரக் கணக்கிலுளர். இவர்கள் வருந்தாமல் இருப்பரோ? சோதர முகம்மதியருக்கு மட்டுமா சலுகை? (1909.)

**சுயராஜ்யமே உயிர்:**—தன் கையே தனக்கு உதவி. நமது கதி மோட்சம் நமது கையிலேயே உளது. தளரா ஊக்கமுடன் நாம் உழைத்தல் வேண்டும். இனி ஒரு கணமும் வீணுதல் கூடாது. நாம் கச்சை கட்டவேண்டும். சுயராஜ்யம் எனும் கருணு மந்திரத்தை எங்கும் பரப்பவேண்டும். யாருக்கும் போதிக்க வேண்டும். ஒவ்வொரு வீட்டிலும் அந்த மந்திரம் ஜபிக்க வேண்டும். ஹிந்துக்கள், முகம்மதியர், பார்சியர், கிறிஸ்தவர், வாலிபர், கிழவர், ஆடவர், பெண்டிர், ஏழை, பணக்காரர் ஆகிய அனைவரும் அம் மந்திரத்தின் பொருளை உணர்தல் வேண்டும். சுயராஜ்ய விருப்பம் மட்டும் போதாது; அதற்காக உழைக்கவேண்டும், பாடுபடவேண்டும், தியாகம் செய்யவேண்டும். சுருங்கச் சொல்லின், நாம் சுயராஜ்யக் கிளர்ச்சியில் மூழ்கவேண்டும். சுயராஜ்யமே உயிர். (1917.)

**மானக்கேடு:**—நாம் கூடியிருக்கும் இடம் டில்லி மாநகரம். நமது தேசத்தின் புராதனமான தலைநகரம். இங்கிருந்து, நாலாயிரம் ஆண்டுகளுக்கு

மேலாக ஹிந்துக்கள் ஆண்டு வந்தனர். முகம்மதியரும், பல நூற்றூண்டுகளுக்கு மேலாக ஆண்டு வந்தனர். அந்த ஹிந்து-முகம்மதியரின் சந்ததியாரே நாம். பழைய நிலையிலிருந்து எவ்வளவு தூரம் கீழே போய்விட்டோம் தெரியுமா? ஓரளவு கயராஜ்யமடைய நமக்குத் தகுதியுண்டு என நாம் மன்றூடவேண்டி யிருக்கிறது! என்ன இழிநிலை பாருங்கள்! இதை நினைக்க நினைக்க, எனக்கு வெட்கமாயுளது; மனத்துயரும் விஞ்சுகின்றது. (1918.)

---

## 13. குண விசேஷம்

பெரியாரின் சொல், செயல், சிந்தை, எல்லாம் ஒரு படிப்பினை. அம்மூன்றினும் சிறந்தது செயலே. சொல்லுதல் யார்க்கும் எளிது. சொல்லிய வண்ணம் செய்தலோ மிகவும் அருமை. சொல்லிய விதமே செய்வார் பண்டிதர்; சிறிதும் பின் வாங்கார். அவரது செயல்கள் ஒவ்வொன்றும் நமக்குப் போதம் புகட்டும். செயல்களில் சிலவற்றை இங்கே சொல்வோம்.

குழந்தைகளைக் கண்டால் மகாத்மாவுக்குக் குதூகலம் பிறக்கும். குழந்தையுடன் குழந்தையாக அவர் விளையாடுவார். அப்போது எழுபது வயதுக் கிழவரென எவரும் நினைக்கமுடியாது. தர்மாத்மா மாளவியாவும், குழந்தைகளைக் கண்டால், கூடி

விளையாடுவார், கொஞ்சிக் குலாவுவார்; வேடிக்கை காட்டுவார். விகடமும் பண்ணுவார். குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்! குழந்தை குட்டிகளிடம் பண்டிதருக்குப் பாசம் அதிகம். எனினும் தேச சேவையில் அப்பாசம் குறுக்கிட்டதில்லை.

மங்கைப் பருவம் வாய்ந்த குமாரி ஒருத்தி காச நோயால் வருந்திக் கிடந்தாள். மருத்துவ வல்லாரை வருவித்து எவ்வளவோ பார்த்தார் பண்டிதர். எல்லாம் விழலுக்கிறைத்த நீராயிற்று. முடிவில் அம் மங்கை நல்லாள் அந்தோ; காலகதி அடைந்தனள். கண்ணீர் ஆறாய்ப் பெருக அவர் கதறினர். வேத வியாசரையும் விட்டதோ பாசம்! சுகன் எனும் புதல்வன் பிரிந்தவுடன், 'சுகா, சுகா' என்று அலறினர் வியாசர்; மைந்தனைத் தொடர்ந்து மறுகி ஓடினர். கடந்த ஞானியராயினும், கடப்பரோ மக்கள் மேல் காதல்!

பண்டிதர் கண்கலங்கி நின்ற சமயம், இசுவர சரணர் என்பார் அவரைக் காண வந்தார்; துக்கம் விசாரித்தார். என்ன சொன்னர் பண்டிதர்? "அன்ப! என்ன செய்யலாம்! போய்விட்டாள். நமது தேசத்திலே ஆயிரக் கணக்கான பெண்மணிகள் இக்கொடு நோய்க்கு இரை ஆகின்றனர். அவர்களுக்கு நல்ல உணவேனும் உண்டா? சாதாரணமான மருத்துவத்துக்குத்தான் வகை உளதா? இல்லையே. இந்த ஒரு பெண்ணுக்காக நான் புலம்பு

கின்றேன். அவர்களின் பெற்றோர் பலவகையிலும் துடிப்பரே. அந் நோயாளிகளுக்கு நம் தேசமெங்கும் சுகவாசஸ்தலம் இருத்தல்வேண்டும். கடவுள் இருக்கிறார்" என்று சொன்னார்.

மறுதினம், காசி சர்வ கலாசாலையில் வைபவம் ஒன்று. பண்டிதர் போய் ஆகவேண்டும். தயங்காமல் பயணமானார் அப்பெரியார். தேச சேவையில், பொது நல உழைப்பில் சிந்தை கொள்வோர், மக்களின் மரண துக்கத்தில் ஆழ்ந்து விடுவரோ! சர்வகலாசாலை ஆசிரியரும் மாணவரும் அதுகேட்டு அதிசயித்தனர். வேறென் செய்வர்?

ஈசுவர சரணரும் பண்டிதரும் பரம நேசர்கள். வக்கீலாக வாழ்ந்த காலத்திலே இருவருக்கும் ஒரே வீட்டில் காரியாலயம். இவ்வகையில் ஈசுவர சரணரின் குமாஸ்தா பண்டிதருக்கு அறிமுகம். ஒரு சமயம் பண்டிதரின் வீட்டில் சுபசோபனமொன்று நடந்தது. அதற்கு ஈசுவர சரணரை அழைத்திருந்தார் பண்டிதர். அவ்விதமே ஈசுவர சரணர் வந்தார். வந்ததும், "உங்கள் குமாஸ்தா எங்கே? அவர் ஏன் வரவில்லை?" என்று பண்டிதர் வினவினர். குமாஸ்தாவை அழைக்கவில்லையே என்றார் ஈசுவர சரணர்.

குமாஸ்தாவையும் அழைக்கவேண்டும் என்பதே மாளவியாவின் கருத்து. ஆனால் மறந்துவிட்டார். அதுபற்றி இரு முறை ஈசுவரரிடம் அவர்

மன்னிப்பு வேண்டினர். இவ்வளவுதானே? மறு தினம் காரியாலயம் சென்றதும், குமாஸ்தாவைக் கண்டார் பண்டிதர்; மன்னிப்பு வேண்டினர்; பின்பே வேறு வேலை பார்க்கலானர். ஏழை எளியவர், பெரியவர் பணக்காரர் முதலிய யாவரிடமும் பண்டிதருக்கு ஒரே மாதிரியான் விசுவாசம். 'நான்', 'பெரியவன்' என்பன அவரிடம் தலைகாட்டா. இஃதே பண்டிதரின் இயற்கை!

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் என்ருர் திருவள்ளுவர். பிரயாகை நகரிலே பண்டிதருக்கு இரண்டு மாளிகைகள். ஒன்று நகரின் நடுவே உள்ளது. மற்ருென்ருே ஐரோப்பியர் வசிக்கும் பிரதேசத்தில் இருப்பது. நகரில் ஒரு சமயம் கொடிய பிளேக் நோய் தோன்றியது. உடனே அனைவரும் நகரைக் காலிசெய்துவிட்டனர். நகர வீட்டிலிருந்து பண்டிதர் ஒரு கடிதம் எடுத்துவர நேர்ந்தது. அதற்காக அவர் நகரினூடே சென்ருர். நிர்மானுஷ்யமான நகரிலே ஒரு வீட்டில் ஏழைக் கிழவியொருத்தி ஏங்கிக் கிடந்தனள். அவள் வேறு குலத்தவள்; மிக்க ஏழை.

அவளைக் கண்டதும், "அத்தை! சௌக்கியமா? தனியே இருப்பதேன்? உடன்வரின் அழைத்துச் செல்வேன்" என்று கனிவுடன் கூறினர் பண்டிதர். கிழவி, "ஐயா! கிழந்தானே! வீட்டுக்குக் காவலாக இருத்திப் போயுளர். தங்களைக் கண்டேன், தணிவு

கொண்டேன்; தங்கள் சொல்லமுதம் கண்டபின், ஆறுதல் அடைந்தேன். அச்சொல்லொன்றே எனக்கு இனிய துணை. இனி, தனிமையில் இருக்கும் தவிப்பு ஏது? வந்தனம்'' என்று கூறி வணங்கினள்.

அலகபாத் நகரிலே காயஸ்தா பாடசாலை ஒன்று. பல ஆண்டுகளுக்கு முன்பு, அதன் பரிசளிப்பு விழா நடந்தது. பண்டித மாளவியா அதற்குப் போயிருந்தார். பரிசளிப்பில் தலைமை வகித்தவர் ஓர் ஆங்கிலேயர்; ஹைகோர்ட் ஜட்ஜி. அந்த ஜட்ஜியின் மகளும் வந்திருந்தனள். அவளுக்கு வயது பதினேழு. கன்னிகழியாப் பெண்; யாதொரு நோயோ நொடியோ கிடையாது. மிகவும் சுகஜீவி. விழா தீர்ந்தது. தமது நண்பரை நோக்கி, "அன்ப? தாங்கள் ஏதேனும் அதிசயம் கண்டதுண்டோ'' என்று கேட்டார் பண்டிதர். நண்பரோ, "தோழ! ஆம் நானும் அதைக் குறித்தே சிந்தியா நிற்கிறேன்'' என்றார். உடனே, மாளவியா, "அன்ப! நம் தேசப் பெண்களும் இவ்வளவு சுகஜீவிகளாக இருக்க வேண்டாமா! அந்நாள் எந்நாள்? அந் நன்னாளை நோக்கி என்ன செய்கிறோம் நாம்?'' என்று மனங் கரைந்தார்.

முன்னம் இங்கே ராஜப்பிரதிநிதிகளாக இருந்தோர் பலர். அவர்களில் ஒருவர் மிண்டோ. அலகபாத் நகரில் பூங்கா ஒன்று திறக்கவேண்டும். அதற்கு அவரை அழைத்தார் பண்டிதர். இது

செய்தி கோபாலகிருஷ்ண கோகுலருக்குத் தெரிய வந்தது. உடனே கோகுலர் "பண்டிதரே! என்ன இது! கையில் ஒரு காசு கிடையாது. ராஜப்பிரதிநிதியை அழைத்துவிட்டீர். சட்டசபை கிடக்கட்டும். உடனே புறப்படுங்கள். வெகு பணம் சேகரிக்க வேண்டும். இல்லாவிட்டால் தங்களுக்கும் அவமானம், பிறருக்கும் அப்படியே" என்று பதைத்தார். பண்டிதர் பதறவில்லை. புன்னகையுடன், "அன்ப! வந்தனம். பணத்தைக் குறித்துக் கவலை வேண்டாம். இங்கிருந்த வண்ணம் கடிதம் எழுதினுல் போதும்" என்று சொன்னுர். பணம் சேகரிக்க அவர் ஓர் ஊருக்கும் போகவில்லை. இருந்த இடத்திலிருந்தே நிருபம் விடுத்தார். வேண்டிய பணம் வந்து குவிந்தது.

அடையா நெடுங்கதவும் அஞ்சல் அஞ்சல் என்ற சொல்லும் உடையான் சடையப்பன் என்ருர் ஒரு புலவர். பண்டித மாளவியாவும் அப்படித்தான். இரவு பகல் என்னுமல் யாரும் அவர் மாளிகைக்கு வந்து போகலாம். ஒரு சமயம் பண்டிதர் பாயும் படுக்கையுமாகக் கிடந்தார். ஒருவரையும் பார்த்துப் பேசக்கூடாது. பேசின் நோய் மிகும் என்று வைத்தியர் எச்சரிக்கை செய்தனர். எனினும், யார் வந்தாலும் சரி, பண்டிதர் பேசத் தவறியதில்லை. வந்தவரின் மனது புண்படக்கூடாது என்பதே பண்டிதரின் கருத்து.

நோய் மிஞ்சிய சமயம். பலர் வந்தனர் பண்டிதரைப் பார்க்க. அவ்வேளை 'அழையா வீட்டில் ஆர் அழைத்தனர் இவர்களை? மேஜையின்மீது கிடக்கும் கடிதங்களையும் புரட்டிப் பார்க்கின்றனரே. இனி ஒருவரையும் உள்ளே விடேன்' என்று படபடத்தான் பண்டிதரின் புதல்வனொருவன். உடனே அவர் தம் மகனை அருகே அழைத்தார்; "அப்பனே! அவர்களுக்குக் கள்ளம் கபடு தெரியாது. என்ன செய்யலாம்? பதறாதே" என்றார். பையன் திருப்தி கொள்ளவில்லை. மீண்டும் பதறினான். அது கண்டதும், பண்டிதர், "அப்பா! இந்த வீடு என் ஆதிக்கத்தில் இருக்கும் வரையில், இந்த ஏழை மக்கள் தங்கு தடையின்றி வரத்தான் செய்வார்கள்" என்று சூடு கொடுத்தார். மகன் என்ன பதில் சொல்வான்! மதிகொண்டு மௌனம் பூண்டான்.

சென்னை பாரிஸ்டர்களில் ஒருவர் ஸ்ரீமான் இ. எல். ஐயர். ஒத்துழையா இயக்கம் ஒடுங்கி நின்ற காலத்தே அவர் வட இந்தியாவில் இருந்தார்; அங்கே ஏழைத் தொழிலாளருக்கு உழைத்தார். அப்போது, விதியின்றி வேலை நிறுத்தம் நேர்ந்தது. பதினாயிரக் கணக்கான தொழிலாளர் பசியால் வருந்தி நின்றனர். முதலாளிகள் வழிக்கு வரவில்லை. உடனே பாரிஸ்டர் ஐயர் நமது பண்டிதரிடம் விரைந்து சென்றார்; சட்ட சபையிலே முறையிட விரும்பினார்.

பண்டிதர் பார்த்தார்; 'ஐயர் நல்லது! சட்ட சபையில் முறையிடத் தடையில்லை. உதைத்த கால் புழுப்பதற்குள் அடி வயிறு சீக்கட்டி விடுமே. சட்ட சபை மூலம் பரிகாரம் ஏற்படுமோ என்னமோ? இதற்கு இடையில் தொழிலாளர் பசியால் வாடி வதங்குவரே. என்னவகை உளது?" என்றார். ஐயர் ஏதுமில்லை என்று பதில் தந்தார். அவ்வளவுதான் தாமதம். ஐயரை உடன் அழைத்துக்கொண்டு புறப் பட்டார் பண்டிதர்; செல்வச் சீமான்களைக் கண்டார்; ஏராளமாகப் பணந்தேடிக்கொடுத்தார்; ஏழைகளின் பசிப்பிணியைத் தீர்த்துவிட்டு வாருங்கள் என்று ஐயருக்கு விடைகொடுத்தார். அன்பின் வடிவம் அல்லவா?

---

## 14. தீண்டாமை

இந்து சமூகத்தில் தீண்டாமை என்பது ஒரு சாபத்தீடு. அது தொலைந்தாலன்றி தேசம் சுகப்படாது. இஃதே பெரியார்களின் கருத்து. இதுபற்றி மாளவியா கொண்டுள்ள கருத்து பின்வருமாறு:—
" தீண்டாதார் என்போரின் ஈன நிலையை எண்ண எண்ண என் நெஞ்சம் பதைக்கும்; கண்களில் நீர் பெருகும். உடலும் துடிக்கும். ஹிந்துக்களில் அனைவரையும் கொண்டதே ஹிந்து மகாசபை. தீண்டாதார் என்போரும் ஹிந்து சமயத்தினரே.

அவர்களும் ஸ்ரீ ராமபிரானை, கிருஷ்ண தேவனை, ஏனைய நம் தெய்வங்களைத் தொழுவர்; நீராடியே உண்பர்; காசு இருப்பின் கோயிலும் கட்டுவர். ஹிந்து மதத்தைப் பின்பற்றி நடக்கும் தீண்டா தானை நான் ஏன் வணங்கக்கூடாது? ஆலயங்களில் ஈசுவர தரிசனம் செய்ய அவனையும் ஏன் நாம் அனுமதிக்கக் கூடாது? என்னிடமும் பாவம் நிரம்பி யிருக்க, ஆலயத்தில் புகாமல் அவனைத் தடுக்க எனக்கு உரிமை உண்டோ? வேதசாஸ்திர விற் பன்னர்களே! எனது இரு கையும் கூப்பி, சாஷ்டாங்க தெண்டனிட்டு உங்களை வேண்டிக் கொள்கிறேன். நமது ஆலயங்களில் ஈசுவர தரி சனம் செய்ய விரும்பும் தீண்டாதாரை நீங்கள் தடுக் காதீர்கள். ஆண்டவன் மீது ஆணையிட்டு வேண்டிக் கொள்வேன். கிறிஸ்தவரும் முகம்மதியரும் தமது மதத்தில் வந்து சேரும் வண்ணம், தீண்டா தாரை அழைக்கின்றனர், இழுக்கின்றனர். ஹிந் துக்களாக இருக்கும் வரையில் தீண்டாதார் நம் குளங்களில் கிணறுகளில் நீர் எடுக்கவந்தால், நாம் அனுமதிப்பதில்லை. கிறிஸ்தவராகவோ முகம்மதிய ராகவோ ஆகிவிடின், தீண்டாதாரை அவ்விதம் நாம் அவமதிப்போமா? பிரஷ்டம் செய்வோமா? எண்ணிப் பாருங்கள்.

"தீண்டாதாரென நாம் எண்ணியிருப்போரே முதன்முதல் வந்து, கலக சமயத்தில் நமக்குத் தலை

கொடுத்து, நமது ஆலயங்களைக் காக்க முற்பட்டனர் அல்லவா ?

"ராஜா ரந்திதேவனது கதையைப் பாருங்கள். ஒரு மண்டலம் அவ்வரசன் பட்டினியாகக் கிடந்தான்; அப்பால் கொஞ்சம் ஆகாரம் கிட்டியது. அதனை அருந்தப்போகும் சமயத்தில், பிராமணனொருவன் வந்து பிச்சை விரும்பினன். உடனே தனது உணவில் ஒரு பங்கு கொடுத்தான் அப்பார்த்திபன். அப்பாலோ தீண்டாதார் இருவர் தமது நாய்களுடன் வந்து பிச்சை கேட்டனர். உடனே அன்பும் ஆதரவும் காட்டி, உணவனைத்தையும் கொடுத்து, ராஜா ரந்திதேவன் உபசரித்தான். உங்கள் வயல்களில் ஊழியம் புரியும் தீண்டாதானொருவன் தாகவிடாய் கொண்டு வந்தால், நீங்கள் நீர் கொடாமல் இருப்பீர்களோ ! உங்களுக்கு ஊழியம் புரிய வேண்டி, அவன் உங்கள் வீட்டில் வருகின்றான். இதற்கு நீங்கள் சம்மதிக்கவில்லையா ? சுத்தமாக இருக்கவேண்டும் என்று தீண்டாதாருக்குப் போதியுங்கள். அவர்களுக்குக் கருணை காட்டுங்கள்; அவர்களை உள்ளன்புடன் கைதூக்கி விடுங்கள்.

## 15. தேசிய தவம்

சென்ற 1932-ஆம் ஆண்டு பிறந்ததும் காங்கிரஸ் மகா சபைக்கும் அரசாங்கத்துக்கும் இடையே சுய ராஜ்ய சுதந்திரப் போர் மூண்டது. அப்போது பண்டித மாளவியா இங்கில்லை, இங்கிலாந்து சென்றிருந்தார். 1932-ஆம் ஆண்டு ஜனவரிமாதக் கடைசியில் அவர் இங்கு வந்துசேர்ந்தார்; சேர்ந்ததும், தேசீய தவம்புரியவேண்டும்'' என்று போதம் புகட்டி, மக்களுக்கு விடுத்த அரிய செய்தி இது:—

"அன்புமிக்க சோதர சோதரிகாள்! உலகெங்கும் பிரமாதமான செல்வ நெருக்கடி. பணத்தில் புரளும் தேசங்களும் தத்தளிக்கின்றன. நம் இந்தியாவோ பரம ஏழ்மையான தேசம். போதாக்குறைக்கு அரசாங்கம் அடக்குமுறையில் இறங்கியுளது; அது எங்குப்போய் முடியும் என்று சொல்வதற்கில்லை. ஆதலால் தேசமக்கள் அனைவரும் கடுஞ்சிக்கனமும் செட்டும் கொள்ளுதல் வேண்டும். அதி அவசியமான பொருளைத் தவிர வேறு எதனையும் வாங்கலாகாது. பணவறட்சி தோன்றியுளது என்பதில் தடையில்லை. நம் தேசமோ தாங்க முடியாத செல்வ நெருக்கடியில் சிக்கிச் சீரழிந்து வருகின்றது.

"எளிய வாழ்வும் தன்னலத் தியாகமும் நமது பரம்பரை விசேஷம். அதனை நாம் அனைவரும்

கடைப்பிடித்து நடக்கவேண்டும். ராஜீய நெருக்கடியும் நம்மைச் சூழ்ந்துள. நம் சோதர சோதரிகளிலே பல்லாயிரக்கணக்கான பேர் சிறையில் கிடக்கின்றனர். மகாத்மா காந்தியோ எர்ரவாடா சிறையிலே பந்தோபஸ்தில் கிடக்கிருர். இது கண்டு நம் எல்லோருக்கும் பரம துக்கம் உண்டு. சுதந்திரம் எய்தவேண்டுமென நாம் அனைவரும் விரும்பி நிற்கிறோம். பலர் அதற்காகப் பாடுபடுகின்றனர். பலன்பெற வேண்டுமாயின், தவம் புரியவேண்டும் என்பது நம் தேசக் கொள்கை. பெருந் தவம்புரிய நம்மால் முடியாது. எல்லோரும் மிகவும் சுலபமான தேசியத் தவமொன்று கொள்ளலாம். அதாவது செல்வ நெருக்கடி தீரும் வரையில், மகாத்மாவும் பிறரும் சிறையில் இருக்கும் வரையில், சுயராஜ்ய சுதந்திரம் எய்தும் வரையில், அனாவசியமாக ஒரு தம்பிடி கூட நாம் செலவு செய்யலாகாது. ஏதேனும் வாங்க வேண்டுமாயின், சுதேசிய சாமானையே வாங்கவேண்டும். இங்கிலாந்திலே இளவரசரும் முதன் மந்திரியும் பிறரும் பிரிட்டிஷ் சாமானையே வாங்கவேண்டும், விற்கவேண்டும் என்று பிரசாரம் புரிகின்றனர். எனவே எனது வேண்டுகோளைத் தேச மக்கள் கவனித்து, தேசீய தவம் கொள்ளவேண்டும். இச்சிறிய தவமேனும் நாம் செய்யவேண்டாமா?"

பல காரணங்களால் உலகிலே தங்க வறட்சி ஏற்பட்டுவிட்டது. அமெரிக்கா, பிரான்ஸ் போன்ற

தேசங்களோ தங்கத்தை வாங்கிக் குவிக்கின்றன. செல்வ நெருக்கடி தலை மிஞ்சிவிடவே, கிஸ்தி கட்ட வகை இல்லாமலும், செலவுக்குப் பணம் இல்லாமலும், ஏழைமக்கள் தங்கள் தங்க நகை நட்டுக்களை எல்லாம் விலைக்கு விற்கின்றனர். எளியோருக்கு உள்ள ஆஸ்தி தங்க நகை ஒன்றுதான். அதையும் அவர்கள் விற்றுவிட்டால் அதோ கதிதான்; இது கண்டு வர்த்தகர் ஓலமிடுகின்றனர்; செல்வ சாஸ்திர நிபுணர்கள் தேம்புகின்றனர். இன்றளவும் நம் தேசத்தைவிட்டு வெளியேறியுள்ள தங்கத்தின் மதிப்பு கோடானுகோடிக்கு மேலாகும். இது சம்பந்தமாய் மாளவியா நம் மக்களுக்கு அன்று விடுத்த செய்தி யாதெனில் :—

"இவ்வளவு ஏராளமான தங்கம் நம் தேசத்தை விட்டுப் போகின்றது. இது கண்டு நான் சகிக்க முடியவில்லை. அத்தனை தங்கத்தையும் இந்தியாவின் அரசாங்கம் விலைக்கு வாங்கியிருக்க வேண்டும். அரசாங்கமோ வாங்காது விட்டது. ஆதலின், தேசமக்கள் தங்களிடம் உள்ள தங்கத்தை விற்கக் கூடாது. நாமே பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளவேண்டும். தங்கம் போய் விட்டால், பின்னல் நம் தேசச் செலாவணி நிலையும் செல்வ நிலையும் மகா மோசமாகிவிடும். விதியின்றியே மக்கள் தங்களிடமுள்ள தங்கத்தை விற்கின்றனர். பின்னல் தங்க விலை குறையும், அப்போது மீண்டும்

வாங்கிக்கொள்ளலாம் என்று சிலர் எண்ணியுளர். இந்த எண்ணம் சுத்தத்தப்பு. சுயநலத்தை மதித்தும் தேச நன்மையைக் கருதியும், தேசமக்கள் தங்கத்தை விற்கலாகாது.

---

## 16. விசுவ வித்தியாலயம்

தேசத்தின் குலக்கொழுந்து சிறுவர் சிறுமியர். அன்னவரே தேசத்தின் பொக்கிஷம்; சமூகச் சிறப்பினுக்கும் ஆதாரம். ஆதலின் அன்னவரின் பயிற்சியில் நமது முன்னோர் தீர்க்க சிந்தை செலுத்தினர்; எவ்வகையிலும் தேர்ச்சி பெற நானு துறைகளையும் வகுத்தனர். ஐந்தில் வளைந்தால் ஐம்பதில் வளையும் என்பது அமுதமொழி.

ஆங்கில ஆட்சியிலே கல்லூரிகள் அனந்தம். சர்வகலாசாலைகளும் பலவாம். அவற்றினின்று ஆண்டுதோறும் வெளிக் கிளம்பும் இளைஞரோ பதினுயிரக் கணக்கு. எனினும் அன்னவர் பெறும் கல்வியோ உயிரற்ற கல்வி. தெய்வம், தேசம், தர்மம் இவற்றில் பற்று உண்டா? அன்றூட வாழ்வினுக்குத்தான் வகை உளதா? இகத்திற்கும் பயனில்லை, பரத்திற்கும் பயனில்லை. அத்தகைய கல்வியில் பட்டம் பெற்றும் யாது பயன்? இதனை இளமையிலேயே உணரலானுர் பண்டித மாளவ்யா. அவ்வளவுதான் தாமதம். உடனே "விசுவ வித்தியாலயம்" ஒன்று காணவேண்டுமென ஆவல் கொண்டார்.

காசுப்பித்து, காமப்பித்து, ஞானப்பித்து, தேசப்பித்து, பதவிப்பித்து, பட்டப்பித்து என எத்தனையோ பித்துக்கள் உண்டு. வித்தியாலயப் பித்துக்கொண்டார் பண்டிதர். "நம்மால் என்ன ஆகும்?" என்னும் காலம் அது. தன்னம்பிக்கை என்பது மருந்தினுக்கும் கிட்டாத காலம். எதற்கும் அரசாங்கத்தை அண்டிக்கிடக்கும் காலம். ஊர்க் கவலைப்பட்டு உடம்பு இளைப்பானேன் என்னும் காலம். காசைத் தேடிக் காலந்தள்ளிக் கண்ணை மூடுவோம் என்னும் காலம். அத்தகைய காலத்திலே தமது கருத்தை அன்பர்களுக்கு அறிவித்தார் பண்டிதர்; காங்கிரஸ்காரரிடமும் கூறினர்.

அது கேட்ட பலரும், "இது ஆகும் காரியமா? இப் பித்து எதற்காக?" என்று பேசினர். ஒருவரோ, "வல்லரசின் பக்க பலம் வேண்டும், பேரதிகாரி யொருவர் முயலுதல் வேண்டும். அங்ஙனமாயின் ஓரளவு சாதிக்கலாம்" என்றார். இன்னொருவரோ, "எட்டாப்பழம். கொட்டாவி விட்டு என்ன பயன்? வள்ளல்களான கோடீசுவரர்கள் முயன்றால் ஒரு வேளை ஆகலாம். பஞ்சைப் பார்ப்பான் என்ன செய்வான்?" என்று செப்பினர். மாதவலால் எனும் ஒருவரே, "அன்ப! முனைந்து முயலுக; இயன்றதை உதவுவேன்" என்றவர்.

விடாப்பிடி கொண்டவர் பண்டிதர்; முயற்சி திருவினை ஆக்கும் என்று உணர்ந்தவர்; முனைந்து

முயலின் முன்னவனே முன் நின்று உதவுவான் என்று நம்பியவர். உயர்ந்த நோக்கினுக்கு உருவம் அமைக்க 1900-ஆம் ஆண்டிலேயே கூட்டம் கூட்டினர். 1904-ஆம் ஆண்டில் மற்றொரு கூட்டம் நடந்தது. காசி மகாராஜா அக்கிராசனம் வகித்தார். மதிவல்லார் பலர் ஆலோசனை சொல்லினர். 1905-ஆம் ஆண்டிலே தமது கருத்தை வகுத்தும் தொகுத்தும் விசுவ வித்தியாலய விளம்பரமொன்று விடுத்தார் பண்டிதர். அதன் சாரம் இது:—

"விசுவ வித்தியாலயத்தில் பற்பல விதமான கலாசாலைகள் இருக்கும். (1) வேதம், வேதாங்கம், சுருதி, ஸ்மிருதி முதலியவற்றை ஸம்ஸ்கிருத கலாசாலை கற்பிக்கும். (2) ஆராய்ச்சி சாலைகள், மூலிகைத் தோட்டங்கள், வைத்தியசாலைகள் முதலிய அங்கங்கள் கொண்ட ஆயுர்வேத வைத்திய கலாசாலை, மருத்துவ வகை அனைத்தும் புகட்டும். (3) விஞ்ஞான சாஸ்திரங்கள் அனைத்தையும் அர்த்த சாஸ்திர கலாசாலை ஊட்டிவரும். (4) பலவித சாதனங்களும் வாய்ந்து வேளாண் கலாசாலை பயிர்த்தொழிலின் வகைதுறை அனைத்தையும் விவரிக்கும். (5) சங்கீதம், நாட்டியம், ஓவியம், சிற்பம் முதலிய கலைகள் கந்தர்வ கலாசாலையில் பரிமளிக்கும். (6) அவசியமான அன்னிய பாஷைகள் அனைத்தையும் சர்வ பாஷா கலாசாலை போதிக்கும்.

"சுருங்கச் சொல்லின், விசுவ வித்தியாசாலை, ஆதிகால குருகுலத்தையும் பிரம்மசரிய ஆசிரமத்

தையும் தன்னகத்தே தாங்கித் திகழும். வடமொழி என்ன, தாய்மொழி என்ன, ஆங்கிலம் என்ன, தேசக் கிரந்தங்கள் என்ன, வாழ்வுக்கு வகை தரும் தொழிலென்ன ஆகிய அனைத்தும் ஒரு மாணவன் பன்னிரண்டு வருஷத்தில் கற்று வெளிக்கிளம்பலாம். தர்மார்த்த காமம் என்னும் புருஷார்த்தம் மூன்றனையும் மாணவர் சரிவர அறியவேண்டும் என்பதே நோக்கம். வருங்கால சந்ததியார் தெய்வ துரந்தரராய், தேச பக்தராய், சமயப் பற்றுடையராய், சமூக திலகங்களாய், ஞான சம்பன்னராய் ஆதல் வேண்டும்.''

அத்தகைய விசுவ வித்தியாலயம் காணவேண்டின் காசு வேண்டுமே. காசும் கொஞ்சமா, நஞ்சமா? லட்சோப லட்சக் கணக்கு? பண்டிதர் ஊர் ஊராகச் சென்றார்; மன்னர்களையும் பிரபுக்களையும் கண்டு பேசினர்; வர்த்தகரையும் வள்ளல்களையும் அணுகி வேண்டினர்; அதிகாரிகளின் உதவியை நாடினர்; கல்வியினும் சிறந்த தானம் இல்லை என்றார்; மக்களின் மனத்தைக் கவர்ந்தார். பிரம்மப் பிரயத்தனம், பகீரதப் பிரயத்தனம் என்பர். மாளவியாவின் பிரயத்தனமோ சொல்லி முடியாது. அவரது தூய சிந்தை, பரந்த நோக்கு, விரிந்த அறிவு, வாக்கு வன்மை, முகவிலாசம் எல்லாம் துணை நின்றன. ஆண்டவனும் அருள் புரிந்தார்.

காசிமா நகரமே அனாதிகாலமாக இந்துக்களின் புண்ணிய ஸ்தலம். ஆதலின் காசியே வாசியான

இடம் என்று ஏற்பட்டது. "காசி ஹிந்து ஸர்வ கலா சாலை" எனும் விசுவவித்தியாலய மசோதா 1915-ஆம் ஆண்டிலே டில்லி சட்டசபையில் தோன்றியது. அப்போது ராஜப்பிரதிநிதியாக விளங்கிய லார்டு ஹார்டிஞ்சு சுமுகம் காட்டினர். "குறுகிய மதப்பற்றை உண்டு பண்ணுது, மனிதனுக்கு மனிதன் சகோதரன் எனும் தத்துவம் உதிக்கும்; சமரஸம் ஏற்படும்; ஞானப்பிரகாசம் வீசும்; ஞாலம் சிறக்கும்" என்று பண்டிதர் பேசினர். சட்டம் ஏற்பட்டது. சர்வகலாசாலையும் கிளம்பத் தொடங்கியது.

1907-ஆம் ஆண்டிலே காசியில் மன்னரும் பெருமக்களும் கூடினர். மோகனதாஸ் காந்தியும் பிரசன்னமா யிருந்தார். அந்நாள் ராஜப்பிரதிநிதி ஹார்டிஞ்சே அஸ்திவாரக் கல் நாட்டினர். 1923-ஆம் ஆண்டில்தான் வித்தியாலயம் திட்டமான ஓர் உருக்கொண்டது. இந்து மதம், தத்துவம் ஞானம் இவையே மூலாதாரம். பலவகையான கலைகளும் அங்கங்கள். மக்களை மகிமை வாய்ந்த பாரத புத்திர புத்திரிகளாக ஆக்குவதே நோக்கம். சுதேச மன்னரில் பரம பக்தரும் பிரியரும் சமயப் பற்றுடையவரும் மைசூர் மகாராஜாவே. அவரே முதல் அத்தியட்சகர் ஆனர்.

அவ்வித்தியாலயம் எழுநூறு ஏகர் விஸ்தீரணமுள்ள இடத்தில் உளது. நாமகள் அங்கே நர்த்தனம் புரிகின்ருள். வானத்தை அளாவும் மாளி

கைகள், வேலைப்பாடமைந்த மண்டபங்கள், அற்புதங் காணும் ஆராய்ச்சி சாலைகள், பேராசிரியர்களின் வாசஸ்தலங்கள், மாணவரின் வாசவிடுதிகள், விளையாட்டு மைதானங்கள், உல்லாச நந்தவனங்கள் முதலியன கண்ணைக் கவரும். வடமொழியில் அஃது "பாஷீய விசுவ வித்தியாலயம்" என வழங்கும். சிலர் "அமுத கும்பம்" என்பர், சிலர் "காமதேநு" என்பர். சிலர் காசி ஹிந்து சர்வகலாசாலை என்பர். அந்த ஆலயத்தை அமைக்க இன்றளவும் ஆன செலவு சுமார் இரண்டு கோடி ரூபாய்.

---

## 17. பிச்சைப் பிரபுக்கள்

சுய நலத்துக்காகப் பிச்சை எடுப்போர் பலர். அன்னர் பல்லைக் காட்டிப் பரிதபிக்க வேண்டும். பொது நலத்துக்குப் பிச்சை எடுத்தல் எளிதன்று. பொது நலப் பிச்சைக்காரரில் இருவர் இணையிலாப் பிரபுக்கள். ஒருவர் உலகம் போற்றும் உத்தம காந்தி. மற்றவர் மாநிலம் போற்றும் மாளவ்யா.

முன்னவர் முதலில் கண்ட நிதி "திலகர் சுயராஜ்ய நிதி". ஏழை எளியவரிடமிருந்து ஒரு கோடி ரூபா சேர்ந்தது. பின்பும் பற்பல நிதி கண்டார் மகாத்மா. பெரும்பாலும் ஏழைகளிடமிருந்தே திரட்டிய பணம். ஏழை எளியவர் இலகுவில் பணம் தருவர்; முழுமனதுடனும் கொடுப்பார்கள். பணக்காரரிடமிருந்து பணம் திரட்டுதல் கடினம். ஆயி

னும் சீமான்களிடமிருந்தே ஒரு கோடிக்கு மேல் திரட்டினர் பண்டிதர். பணம் படைத்தோரிட மிருந்து அவ்விதம் பெருந்தனம் திரட்டியவர் பண் டிதர் ஒருவரே. அவ்விருவரையும் ஓரன்பர் பிச்சைப் பிரபுக்கள் என்று பெருமையாகப் பேசுவார்.

1912-ஆம் ஆண்டிலே கல்கத்தா நகரில் பண் டிதர் ஒரு பிரசங்கம் புரிந்தார். தனவந்தர், ஜமீன் தார்கள், பிரபல வர்த்தகர் முதலியோர் வந்திருந் தனர். பண்டிதரின் சொற்பொழிவு பலரையும் பரவசப்படுத்தியது. உடனே சிலர் கட்டுக்கட்டாக நோட்டுக்கள் தந்தனர்; சிலர் பை பையாகப் பணத் தைக் கொட்டினர்; சிலர் லட்சக் கணக்கில் உண் டியல் கொடுத்தனர். சிலர் பவுன் பவுனகப் பரிந் தளித்தனர். சுருங்கச் சொல்லின், பிரசங்க மாரிக் குப்பின் பொன்மாரி பொழிந்தது.

அது சமயம் அருகேயிருந்த ஸர் விசுவேசுர ஐயா வியந்து நின்ருர். அரசாங்கத்தாரும் ஆச்ச ரியம் அடைந்தனர். பண்டிதரின் நடையும் உடை யும், நோக்கும் போக்கும், உள்ளமும் உரையுமே காரணங்கள். இரண்டு கோடியுடன் பண்டிதர் திருப்தி அடையவில்லை. அறுபத்து நான்கு கலை களும் நன்கு பிரகாசிக்க வேண்டின், அந்த ஆலயத் துக்கு இன்னும் நான்கு கோடி தேவை. அப் பெரியாரின் கோரிக்கை இது. அதற்காக இன்னும் முயன்று வருகிருர். தனி மனிதரொருவர் தன்னம்

பிக்கையும் தெய்வ சகாயமும் கொண்டு விசுவ வித்தியாலயத்தை அமைத்திருத்தல் அருமையினும் அருமை!

பணம் திரட்டிய பின்னர் சிற்ப சாஸ்திரிகள், யந்திர சாஸ்திர நிபுணர்கள், தொழிலரசர், கல்வி மான்கள், பிரிய நேசர்கள் முதலிய பலரையும் பண்டிதர் கலந்து பேசினர்; இன்னும் யார் யாரைக் கலந்து பேச வேண்டுமோ அவர்களையும் கலந்து பேசினர். அனைவரின் ஆலோசனைகளையும் கேட்டறிந்தார்; தமது ஆதி நோக்கில் இம்மியும் தவறாமல் காரியத்தைச் சாதிக்கலானர். "மெய் வருத்தம் பாரார், பசிநோக்கார், கண்துஞ்சார்" எனும் பாடலுக்கு நமது பண்டிதரே பரம உதாரண புருஷர்.

தோன்றின் புகழொடு தோன்றுக. அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று. இது தமிழ் வேத கீதம். பாருலகில் பிறத்தலும் இறத்தலும் இயற்கை. பூதவுடம்பு மடியும். புகழுடம்பு மடியாது. புகழ் வேண்டி, முன்னேரிலே பலர் கோயில் கட்டினர், குளம் வெட்டினர், சத்திரம் வைத்தனர், சாவடி சமைத்தனர், சாலை செய்தனர், சோலை வளர்த்தனர். அவை ஒரு சாராருக்கே பயன்படும். பண்டிதர் அமைத்துள்ள ஆலயமோ அனைவர்க்கும் பயன்தரத்தக்கது.

1930-ஆம் ஆண்டில் ராஜீயக் கொந்தளிப்பு ஏற்பட்டதல்லவா? இமயமலையும் ஏழு கடல்களும்

அக் கொந்தளிப்பில் பட்டுழன்றன். விசுவ வித்தியாலயம் தப்ப முடியுமோ? அதன் உயிர் நாடி போன்றவர் பண்டித மாளவியா. அவரும் சுதந்திரப் போரில் இறங்கிச் சிறையானர். வித்தியாலய மாணவரிலும் பலர் ஈடுபட்டனர். ஆண்டுதோறும் திரவிய சகாயம் செய்யும் அரசாங்கம் வாளாவிருக்குமோ? திரவிய சகாயம் நின்றுவிடும் என்று ஆணை பிறந்தது. பலரும் அச்செங்கோல் கேட்டு அஞ்சினர். ஆண்டவன் அருள், அன்பரின் ஆசி, பண்டிதரின் சித்த சுத்தி இவை பக்கபலமாயின. வித்தியாலயம் வீறு குன்றவில்லை.

ஆதியிலே அவ்வித்தியாலயத்தைக் குறித்து நமது பண்டிதர் பேசியதின் சாரம்:—"சமயபோதத்திற்கு ஒரு ஜீவசக்தி யுண்டு. அடியேன் அதில் நம்பிக்கை கொண்டவன். நமது பாடசாலைகளிலும் கலாசாலைகளிலும் சமயபோதம் இல்லாதிருத்தல் பெருங் குறையாம். இதனுல் மிக்க பாதகம் விளைந்துளது. அக்குறை, விசுவ வித்தியாலயத்தின் மூலம் தீரும். இந்துக்களின் சமயம், கிரந்தம் இரண்டினுக்கும் அந்த ஆலயம் தாயகமாகத் துலங்கும். இதர வித்தியாலயங்களும் விசுவ வித்தியாலயத்தைப் பின்பற்றும் என்பது எனது நம்பிக்கை. நாளடைவிலே சமயபோதனை நமது கல்வி முறையில் ஒரு முக்கிய அம்சமாதல் வேண்டும்.

"எனது பிரார்த்தனை இது. விசுவ வித்தியாலயத்திலிருந்து அறிவுச்சுடரும் ஞானப்பிரகாசமும்

வீசும். வித்தியாலய மாணவர் உலகின் சிறந்த மாணவருக்கு எவ்வகையிலும் சரிசமமாக விளங்குவர். இம்மட்டோ? பெருமக்களாய், ஈசுவர பக்தராய், தேச சேவகராய், ராஜீய விசுவாசிகளாய் வாழப் பயிற்சி பெறுவர். ஆண்டவன் அருள்புரிக.''

---

## 18. சட்ட சபை

அரசியலுக்கு அடிப்படை சட்ட திட்டம். சட்ட திட்டஞ் செய்வது சட்ட சபை. அச்சபை உண்மையில் ஜனப்பிரதிநிதி சபையாக இருத்தல் வேண்டும். இதற்கு வாக்குரிமையே ஆதாரம். வயது வந்த ஆண் பெண் அடங்கலுக்கும் வாக்குரிமை அவசியம். அங்ஙனமாயின் சரியான பிரதிநிதிகள் சட்டசபையில் இருப்பர். இருக்கவே, நேர்மையான சட்ட திட்டம் பிறக்கும்; ஜனங்களுக்குத் திருப்தியும் உதிக்கும். ராஜ்யமும் சுயராஜ்யமாக விளங்கும்.

சட்ட சபை அரைகுறையாக அமையின், ஆட்சியும் அரைகுறையாகத்தான் இருக்கும். ஆதலினால்தான் அச்சபையும் உரிமையும் விரிவாதல் வேண்டுமென ஆதிமுதல் காங்கிரஸ் மகாசபை வற்புறுத்தியது. அப்போதெல்லாம் நமது பண்டிதரே அத்தீர்மானங்களின்மேல் அழுத்தம் திருத்தமாகப் பேசியவர். அது காரணமாக 1892-ஆம் ஆண்டிலே சட்ட சபைகள் ஓரளவு திருந்தின. அப்பால் சட்ட சபையிலும் பண்டிதர் புகுந்து ஊழியம் புரியலானார்.

முதன் முதலாக ஐக்கிய மாகாண சட்ட சபையில் அங்கம் கிடைத்தது. தமது மாகாணத்தின் நலங் கருதி அச்சபையில் உழைத்தார். சட்ட சபைகள் சிறிது திருந்தியும் பயனில்லை. ஏனெனில் மாகாண கவர்ன்மெண்டுகள் தக்க சுதந்திரம் பெறுமல், இந் தியா கவர்ன்மெண்டுக்குக் கட்டுப்பட்டுக்கிடந்தன.

பார்த்தார் பண்டிதர். மாகாண கவர்ன்மெண் டுகள் தக்க சுதந்திரம் பெறவேண்டும் என்றார். 1908-ஆம் ஆண்டிலே அவர் சொன்னது இது:— இந்தியா கவர்ன்மெண்டின் கையாள்கள்போல் மாகாண கவர்ன்மெண்டுகள் இருத்தல்கூடாது; பரிபூரணமான சுதந்திரமும் அதிகாரமும் பெறுதல் வேண்டும். அம் முறையில் அரசியலைத் திருத்தல் வேண்டும். திருத்தினலன்றி மக்கள் நலம்பெற முடியாது. சமஷ்டி முறை சரியானது.''

பின்பு 1909-ஆம் ஆண்டில் மிண்டோ - மார்லி திருத்தங்கள் ஏற்பட்டன. உடனே சட்ட சபைகள் முன்னிலும் விரிவாயின. ஆகவே, மாகாண சட்ட சபையை விடுத்து, டில்லி சட்ட சபையில் ஸ்தானம் வகிக்கலானுர் பண்டிதர். அப்போது தேசத்திலே ராஜீயக் கொந்தளிப்பு. ஆட்சி முறை நேர்மையாக இல்லை. ஜனங்களுக்கு அதிருப்தி மிகுதி. அதி கார வர்க்கத்தார் அடக்குமுறைச் சட்டங்களை மேற் கொண்டனர். "பத்திரிகை வாய்ப்பூட்டுச் சட்டம்" பிறந்தது. பண்டிதர் சகிக்கவில்லை. "ஆட்சி

முறையின் குறைபாடுகளை எடுத்துச் சொல்லுதல் பத்திரிகைகளின் கடமை. அதிகார வர்க்கத்தார் ஓர் அறிக்கை விடுத்து, ஜாமீன் கட்ட வேண்டுமென்று கேட்டால், பத்திரிகைகளின் சுதந்திரம் என்னுவது ? இச்சட்டம் தகாது'' என்று பண்டிதர் கண்டித்தார்.

அப்பால் "ராஜத்துவேஷ சட்டம்" புதுப்பிக்கப்பட்டது. இதுபற்றி நமது பண்டிதர் பேசியது:— "சட்டம் கிளம்ப அவசியமே இல்லை. குளிக்கப்போய் சேற்றைப் பூசிக்கொள்வது போலாகும் சட்டத்தின் பலாபலன். கிழக்கு வங்காளத்திலே மூன்று மகாநாடுகளை அதிகாரிகள் கலைத்தார்கள். தாழ்ந்த வகுப்பாருக்கு உதவிபுரியும் நோக்கத்துடன் கூடிய மகாநாட்டையும் கலைத்துளர். அடக்கு முறைச் சட்டம் இல்லாவிடின், அம்மகாநாடுகளைக் கலைத்திருக்க முடியாது. ஜனங்களுக்கு உண்டாகும் மனக் கசப்பை அரசாங்கம் மதிக்க வேண்டும். பத்திரிகை வாய்ப்பூட்டுச் சட்டம், ராஜத்துவேஷ சட்டம் இரண்டும் இருக்கும் வரையில் சமரஸம் என்பது இராது."

ஆரம்பக் கல்வியைக் கட்டாயமாகப் போதிக்க வேண்டும் என்று **கோபால கிருஷ்ண கோகுலர்** ஒரு மசோதா கொண்டுவந்தார் டில்லி சட்ட சபையில். "எல்லாருக்கும் எழுத்து வாசனை இருக்கவேண்டுமாயின், கட்டாயக் கல்வி வேண்டும். இன்றேல்

முடியாது. நாகரிகம் வாய்ந்த எந்தத் தேசமும் இந்த உண்மையை உணர்ந்துளது. ஆதலின் எங்கும் கட்டாயக் கல்வி ஏற்பட்டுளது. இந்தியாவும் அதனை மேற்கொள்ள வேண்டும். மேற்கொள்ளாவிடின், தேசமுன்னேற்றம் எவ்விதம் ஏற்படும்?'' என்று பண்டிதர் பேசினர்.

இங்கே பலருக்கும் பிழைப்பில்லை. ஆதலின் அநேகர் அந்நிய நாடு போயுளர் வேலையை நாடி. அவ்விதம் அத் தீவுக்குச் சென்றோர் அனந்தம். ஒப்பந்த முறையில் அவர்கள் போனர்கள். அம் முறையோ அடிமை வாழ்வினும் கேவலமானது. ஆகவே அந்த முறையை ஒழித்துவிட வேண்டும் என்று டில்லி சட்ட சபையில் பலரும் வாதாடினர். பண்டிதர் பேசியது :—

“சென்ற 75 வருஷ காலமாக ஒப்பந்தக் கூலி முறை அப்பப்பா சன்மார்க்கத்தைக் குலைத்துவிட்டது. அதை நினைக்க நினைக்க எங்கள் நெஞ்சம் புண்ணுகிறது. தலையையும் தொங்கவிட்டுக்கொள்ள வேண்டும். சரீரத்துக்கு மட்டுமா கேடு? ஆன்மாவும் தாழ்வடைகின்றது. எங்கள் சோதரரும் சோதரிகளும் அங்கே படும்பாட்டைக் கண்டு ஆண்டவனும் சகியான். எனவே அதனை உடனே ஒழித்தாக வேண்டும்.''

கொண்ட கொள்கையினின்றும் சிறிதும் தவறார் பண்டிதர். அவரும் கோபாலகிருஷ்ண கோகு

லரும் பரம நேசர். டில்லி சட்டசபையிலே ஒரு மசோதா விஷயமாய் கோகுலர் ஓர் அபிப்பிராயம் கொண்டார். மாளவ்யா அதற்கு மாறுபட்டார். உடனே மாளவ்யாவை மகாதீரன் என்று சிலர் போற்றினர். சபை முடிந்தது, வேறு ஒருவருடன் பண்டிதர் பேசி நின்றார். அப்போது மாளவ்யா மொழிந்தது இது :—

"கோகுலர் கோழையாம்! நான் தீரனும். என்ன பாவம் இது! தாங்க முடியவில்லை. கோகுலரைப்போல் கோழை என்று பேர்வாங்கத் தயங்கேன்; ஆயினும் கொண்டகொள்கையைக் கைவிடுவதானல், எனது யக்ஞோபவீதத்தை அறுத்து எறிந்துவிடுவேன்."

மனப்பூர்வமான அபிப்பிராயத்தை முன்னிட்டு ஒருவரைக் கோழை எனல் தகாது என்பதே பண்டிதரின் கருத்து. கொண்ட கொள்கையினின்று சிறிதும் தவறக் கூடாது என்பதும் அவர் கோட்பாடாம்.

ஐக்கிய மாகாண சட்ட சபையிலும் சரி, டில்லி சட்ட சபையிலும் சரி, பண்டிதர் பேசியது இலக்கியம் போல், ராஜீயக் கிரந்தமாக இருக்கும்.

---

## 19. எல்லாம் அர்ப்பணம்

அபிப்பிராய பேதம் ஏற்படுதல் இயற்கை. தேச மகா சபைக்கும் பண்டிதருக்கும் சில சமயம் பேதம் நிகழும். ஆயினும் தேசத்தோடு ஒத்து வாழ்வதே அவர் கோட்பாடு. 1930-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் உப்புச் சண்டை உதித்தது. அச்சண்டை எங்கும் பரவியது காட்டுத் தீபோல். அது சமயம் பண்டிதர் டில்லி சட்ட சபையில் இருந்தார்.

தேசநிலையை நோக்கவே, அவர் மனம் பதைத்தது. சட்ட சபையில் வீற்றிருக்க மனமில்லை. உதறித்தள்ளி வெளியே வந்தார். வருகையில் வாய் மூடி மௌனியாக வரவில்லை. தமது கருத்தையும், அரசாங்கத்தின் போக்கையும் விளக்கினர்; ராஜப் பிரதிநிதிக்கு ஒரு கடிதம் விடுத்தார். அக்கடித வாசகம் மிக விசேஷம். ஆதலின், அதன் சாரத்தை மட்டும் இங்கே தருவோம்:—

சட்டசபைப் பதவியை இதோ ராஜிஞமா செய்கிறேன். ராஜிநாமா செய்வதில் மிக்க வருத்தந்தான். என்ன செய்யலாம்! வேறு வகையில்லை. சீர்திருத்தம் வேண்டுமென்று ஆதிமுதல் போராடியவன் நான். 1886-ம் வருஷம் காங்கிரஸில் சேர்ந்தேன். ஐக்கிய மாகாண சட்ட சபையில் ஒன்பது வருஷமிருந்தேன். அப்பால், 1910-ஆம் வருஷ முதல், டில்லி சட்ட சபையில் ஸ்தானம் வகிக்கலானேன்.

பின்பு மாண்டேகு—செம்ஸ்போர்டு சீர்திருத்தம் வந்தது. அது போதாது, அதிருப்திகரமானது, ஏமாற்றத்திற்கும் இடமானது, என்பது என் கருத்து. இருந்தாலும், சீர்திருத்தத்தை நடத்திப் பார்ப்போம் என்று நினைத்தேன். சட்டசபை பகிஷ்காரத்தை எதிர்த்தேன். காங்கிரஸ் தீர்மானம் ஒரு புறமிருந்தும், சட்ட சபை பகிஷ்காரம் வேண்டாம், சபைக்குள் சென்று போராடுவோமென்று பலரையும் அழைத்தேன். என் வேண்டுகோளுக் கிணங்கி, அநேகர் வந்தனர். எனது நிலை இது. இப்படியிருக்க, இன்று ராஜினமா செய்கிறேன். ஆர அமர யோசித்தே இந்த முடிவுக்கு வந்தேன்.

1924-ம் வருஷம் இப்புதிய சட்ட சபையில் புகுந்தேன். புதிய அரசியலின் தீமைகளை அன்று முதல் கண்டித்து வந்துள்ளேன். எனினும், அரசியலை நன்கு நடத்தினல், பலன் கிட்டுமென்று எண்ணினேன். பலன் கிட்டும்படி அரசாங்கம் நடக்கவில்லை. சென்ற பத்து வருஷகால அனுபவம் போதும். சர்க்காரோ சட்ட சபைக்குக் கட்டுப்பட்டு நடக்கவில்லை. சர்க்காரை அகற்றிவிடவும் சட்ட சபையினல் ஆகாது. உத்தியோக மெம்பர்கள், நியமன மெம்பர்கள் இவர்களைக்கொண்டு காரியத்தை யெல்லாம் தாங்கள் விரும்பும் வண்ணம் சர்க்கார் சாதிக்கின்றனர். ஜனங்களுக்கு உபகாரமான எதுவும் செய்யவில்லை. புதிய திருத்தம் வந்

தும் என்ன? பிரிட்டிஷ் நன்மைகளை மதித்து, இந்தியாவைச் சுறண்டுவது நிற்கவில்லை. எனவே ஜனங்களின் நன்மைகளைப் பாதுகாக்க இச் சட்ட சபைக்குச் சக்தியே கிடையாது.

இந்தப் பத்து வருஷத்திலே சர்க்கார் செலவு மிகவும் உயர்ந்துளது; தாங்க முடியவில்லை. இந்த வருஷம் அதிக வரி ஐந்தரைக் கோடி ரூபாய். உயர் தர உத்தியோகங்களை இன்னும் அநேகமாக பிரிட்டிஷாரே ஆண்டு அனுபவிக்கின்றனர். அவர்களுக்குக் காட்டப்படும் சலுகை இன்னும் அதிகமாகவே உளது. ராணுவச் செலவு குறையவே இல்லை. ராணுவத்திலே உயர் பதவிகளில் இந்தியரை அமர்த்த வகை கிடையாது. ரயில்வே நிர்வாக சபை யென்பது 25 வருஷ காலமாக இருந்தும் என்ன? அச்சபையில் ஓர் இந்தியரைக்கூட நியமிக்கவில்லை. அபார சம்பளமுள்ள பல பெரிய பதவிகளில் இந்தியரை நியமிக்கவேண்டும். ஆயினும் ஐரோப்பியரின் ஏகபோகமாகவே அவை இருந்துவருகின்றன.

சர்க்காரின் செல்வ நிர்வாகமோ தேசத்தைப் பாழ்படுத்துகிறது. நாணய மாற்று விகிதத்தை எடுத்துக்கொள்வோம். அப்பப்பா! இந்தியாவுக்கு எவ்வளவோ நஷ்டம்! இந்தியராகிய நாங்கள் எவ்வளவு சண்டை போட்டும் என்ன? சர்க்காரின் செவியில் ஏறவில்லை.

தேசத்திலே வியாபார மந்தம் மிகுதி. பிழைப்பில்லாத் திண்டாட்டம் அதிகம். வரிச்சுமையைத் தாங்க முடியவில்லை. ஆலைத்தொழில் தற்போது அலறும் நிலையில் இருக்கிறது. இன்னும் எத்தனையோ விஷயங்கள் உள. தற்போதுள்ள அரசியலின்படி, தேச மக்களுக்குப் பிரமாதமான தீமை தான். இச்சட்டசபையில் நாங்கள் இருந்தென்ன ? அத் தீமையைத் தடுக்க முடியவில்லை. எனவே, தற்போதுள்ள அரசியல் விரைவில் மாறவேண்டும். நல்ல முறையில் ஏற்படவேண்டும். இதற்காக என் காலம், முயற்சி, எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்யப்போகிறேன். இதுவே என் பிரார்த்தனை. மகத்தான இத் தேச ஜனங்களுக்கு நியாயம் கிடைக்கவேண்டும். நாகரிக உலகிலே உங்களுக்கும் (அதாவது பிரிட்டிஷாருக்கும்) நல்ல பேர் இருக்கவேண்டும். எங்கள் தேசத்தை நாங்களே ஆண்டுகொள்ள வேண்டும். எங்களுக்கு சுதந்திரம் வேண்டும்.

---

## 20. போராடும் உரிமை

பண்டித மாளவ்யா மகா சாந்த சொரூபி. மேலும் கருணை மிகுந்த வேதியர். எனினும் விதியின்றேல் போர் புரிய வேண்டும் என்பதே அவர் கருத்து. வேறு வகை காணுதுபோயின், வாளுருவிப் போர் முனையிலே குதித்து, சுதந்திர வீரச்

சேனையை நடத்தவும் தயாரென ஒரு சமயம் காங்கிரஸ் மேடையினின்று பேசினவர்.

சென்ற 1933-ஆம் ஆண்டிலே தேசமெங்கும் அவசரச் சட்டம் தாண்டவம் ஆடியதல்லவா? காங்கிரசினிடம் அபிமானமுள்ள சங்கம், சபை எதையும் அரசாங்கம் கலைத்துவந்தது. இருந்தாலும் வழக்கம்போல் காங்கிரஸ் மகாசபையைக் கூட்ட மக்கள் முயன்றனர். தேசத்தின் நாலுபாகங்களிலிருந்தும் பிரதிநிதிகள் போயினர். பலரையும் அதிகாரிகள் வழிமறித்தார்கள்.

என்றாலும் கல்கத்தாவிலே காங்கிரஸ் மகாசபை கூடவேண்டும். அதற்கு மாளவ்யாவை அக்கிராசனராகக் கொண்டனர். அவரும் புறப்பட்டார். வழியிலே சர்க்கார் மறித்து, அவரைக் காவலில் போட்டுவிட்டனர். ஆயினும் மகாசபை கூடிக் கலைந்தது. அச்சபையில் நிகழ்த்த அவர் வரைந்த பிரசங்கத்தின் சாரம் இது:—

தற்சமயம் தேசத்திலே என்றுமில்லாத நிலைமை! பரம புருஷன் மகாத்மா காந்தி! அவரும் பலரும் சிறையில் கிடக்கின்றனர். இந்நிலையில் காங்கிரஸ் அக்ராசனப் பதவி என் தலையில் சுமந்துளது. போன வருஷம் (1932) டில்லி காங்கிரசில் தலைமை வகிக்க டில்லி நகருக்குள் நுழைந்த சமயம், என்னை இடைவழியில் அதிகாரிகள் நிறுத்திச் சிறையில் தேக்கி வைத்தனர். போலீஸ் அதிகாரிகள் பிர

மாதமாக முயன்றும் அம் மகாசபை நடந்தது. இந்த வருஷமும் அக்கிராசனம் வகிக்க, என்னை விடமாட்டார்கள் என்பதே வெகு ஜனங்களின் நினைவு. அது ஆச்சரியமன்று. கல்கத்தாவுக்குச் செல்ல உத்தரவு கிட்டாது என்று காசி கலெக்டர் எனக்கு எழுதினர். எனினும் இன்ன ரயிலில் கல்கத்தா செல்வதாக அதிகாரிகளுக்கு முன்னதாக எழுதியே கல்கத்தாவுக்குப் புறப்பட்டேன்.

போன வருஷம், டில்லி காங்கிரசுக்கு வந்த பலரை வழியிலேயே சர்க்கார் கைதி செய்தனர். இந்த வருஷமும் கல்கத்தா செல்வோரைத் தடுப்பதில் போலீசார் கண்ணுயிருப்பதாக அறிகிறேன். கல்கத்தா காங்கிரசுக்கு வருவோர்க்கு இடங்கொடுத்தாலும் ஆதரவு அளித்தாலும் வேறு எந்த உதவி செய்தாலும் தண்டனை கிட்டுமென்று கல்கத்தா போலீஸ் கமிஷனர் அறிக்கை செய்திருக்கிறார். வரவேற்பு சபை, சட்ட விரோதமான சபை என்றும், எச்சரிக்கை செய்திருக்கிறார். கல்கத்தாவிலே காங்கிரஸ் கூட முடியாதபடி எல்லாம் செய்துளது அரசாங்கம்.

அரசாங்கத்தின் தற்போதைய பான்மை செல்லாது; விவேகம் அற்றதுமாம். காங்கிரஸ் மகாசபை தேச மகாசபை; இதற்கு இணையான சபை எதுவுமில்லை. சென்ற 47 வருஷமாக இச்சபையிருந்து வருகிறது. மக்களின் உரிமைக்கும் சுதந்

திரத்திற்கும், சுயராஜ்யத்திற்கும் மார்தட்டி நின்று போராடும் சபை இது ஒன்றுதான். சென்ற 13 ஆண்டுகளிலே தேசமக்களில் பிரபலஸ்தர் பலர், தேச நலங்கருதி அடுத்தடுத்து சிறையில் கஷ்டப் பட்டுளர். எனவே காங்கிரஸ் மகாசபையே உற்ற துணைவன். அதன் வாக்கே பரம வாக்கு என்று எல்லோரும் நம்பி நிற்கின்றனர்.

மாண்டேகு—செம்ஸ்போர்டு திருத்தம் தோன் றியதும், மத்திய கவர்ன்மெண்டிலும் பொறுப் பாட்சி வேண்டுமென்று காங்கிரஸ் வற்புறுத்தி வந் திருக்கிறது. ஆயினும், அரசாங்கம் அசையவில்லை. எனவே, 1929-ம் ஆண்டு முடிவதற்குள் குடியேற்ற நாட்டு அந்தஸ்து கொடுப்பதாக அறிக்கை வராவிட் டால், பரிபூர்ண சுயராஜ்யமே லக்ஷியமாகும் என 1929-ம் வருஷ ஆரம்பத்திலேயே காங்கிரஸ் மகா சபை தீர்மானித்தது. அரசாங்கம் அவ்விதம் உறுதி த்ரவில்லை. ஆதலினால் பரிபூர்ண சுதந்திரமே லக்ஷிய மென 1930-ம் ௵ ஜனவரி ௴ 1-ந்தேதி காங் கிரஸ் மகாசபை பஹிரங்கம் செய்தது. மார்ச்சு 12-ந்தேதி மகாத்மா காந்தி சட்டமறுப்பு இயக்கம் தோற்றுவித்தார். அந்த இயக்கத்தை நசுக்க அர சாங்கம் மிடுக்கான ஏற்பாடுகளை மேற்கொண்டது. ஆயினும் பலிக்கவில்லை. ஒரு வருஷகாலம் அர சாங்கம் கனமிடுக்காக இருந்தும், முடிவில் காந்தி—இர்வின் ஒப்பந்தம் எற்பட்டது. பிரிட்டிஷ் கவர்ன்

மெண்டும் உள்ள நிலையை மதித்து அந்த ஒப்பந்தத்திற்கு அங்கீகாரம் தந்து, ஆசிகூறியது.

காங்கிரஸ் பிரதிநிதிகள் வராவிடின், வட்ட மேஜை மகாநாடு பலிக்காது என்று இங்கிலாந்தின் பிரதம மந்திரி அறிந்துகொண்டார். உடனே காங்கிரசின் கூட்டுறவை நாடினர். மகா சபையின் ஏக நாயகனாக மகாத்மா காந்தி சீமை சென்றார். வட்ட மேஜை மகாநாட்டில் கலந்து கொண்டார். மகா நாடு நடந்துகொண்டிருக்கையில், இங்கிலாந்தில் பார்லிமெண்டு கலைந்தது. புதிய கவர்ன்மெண்டு ஏற்பட்டது. ஏற்படவே அரசாங்கத்தின் போக்கு மாறியது. மகாநாட்டை முறிக்கவும், காங்கிரசுடன் போராடவும் அரசாங்கம் கங்கணம் பூண்டது.

மகாநாடு சற்றே நிற்க, மகாத்மா காந்தி இந்தியாவுக்குத் திரும்பினர். அவர் திரும்புமுன்பே காங்கிரசை மல்லுக்கு இழுக்க எல்லா ஏற்பாடுகளும் இங்கே நடந்துவிட்டன. ராஜப்பிரதிநிதியுடன் பேச விரும்பியும், மகாத்மா காந்திக்கு அனுமதி கிடைக்கவில்லை. அவரை அதுமுதல் காவலில் போட்டுள்ளது அரசாங்கம். ஒன்று ஒன்றாக அவசரச் சட்டங்கள் கிளம்பின. சென்ற 15 மாதத்திற்குள் பல்லாயிரக் கணக்கில், ஸ்திரீகள், குழந்தைகள் உள்பட, ஒரு லக்ஷத்து இருபதாயிரம் பேர் சிறையில் போடப்பட்டனர்.

சட்ட மறுப்பை மேற்கொண்டதால்தான் காங்கிரசுடன் சர்க்கார் போர்புரிகிறதாம். அன்று!

அன்று! தேச நிர்வாகத்தை இந்தியரிடம் ஒப் படைக்க இங்கிலாந்துக்கும் ஐரோப்பியருக்கும் மன மில்லை. மகாஜன உரிமையைக் காக்கவே காங் கிரஸ் மகாசபை சட்டமறுப்பை மேற்கொண்டது. அநீதியான சட்டம் ஏற்படின் அதை எதிர்த்துப் போராட மக்களுக்கு உரிமை உண்டு.

எல்லாரும் சரிசமமாக நடத்தப்படுவர் என்று ஐரோப்பிய மகா யுத்த காலத்தில் இங்கிலாந்து வாக்குறுதி தந்தது: அந்த யுத்தம் தீர்ந்ததோ இல்லையோ இங்கிலாந்தின் போக்கே மாறிவிட்டது. இந்தியாவுக்கு சுய நிர்ணயம் அளிக்கவும் இங்கிலாந் துக்கு மனமில்லை. இந்தியாவின் விருப்பத்தை மதியாமல், புதிய அரசியலை அளிக்க இங்கிலாந்து எண்ணுகிறது. வெள்ளை அறிக்கையே இதற்கு சாட்சி. இன்று இருப்பதைவிட, இந்தியாவின் நிலை இன்னும் மோசமாக ஆகிவிடும். வெள்ளை அறிக்கையை எந்த இந்தியனும் ஒப்புக்கொள் ளான்.

தேச மக்களே! உள்ள நிலையை உணர்ந்து விழித்து எழுங்கள். பரிபூரண சுதந்திரமே எல்லா ரும் விரும்புகின்றனர். நாம் அனைவரும் ஒருமுக மாக முயன்றால், காரியம் கைகூடும். ஆதலின் இந்துக்கள், முகம்மதியர், சீக்கியர், கிறிஸ்தவர் ஆகிய அனைவரும் ஜாதிமத பேதம் விடுத்து, ராஜீய ஒற்றுமை கொள்ளவேண்டும். இதுவே எனது

வேண்டுகோள். தற்சமயம் ராஜீய வானம் மகா மூட்டமா யிருக்கிறது. இருந்தாலும் விரைவில் நல்லகாலம் கிட்டும் என நினைக்கிறேன். சுதந்திர மும் ஆனந்தமும் அடையும் நாள் நெருங்க அனை வரும் ஒரு மனதுடன் முயல்வாராக. நமது பங்கில் சத்தியம் இருக்கிறது. நியாயம் இருக்கிறது. ஆண்ட வனும் அருள்புரிவான். நாம் வெற்றி பெறுவது நிச்சயம். வந்தே மாதரம்.

---

## 21. குருக்ஷேத்திரம்

குருக்ஷேத்திரம், குருக்ஷேத்திரம் என்கிறோம்; புண்ணிய தலமாகவும் போற்றுகிறோம். காரணம் யாது? அங்கே சத்தியமும் அசத்தியமும் மல்லுக்கு நின் றன. பாண்டவர் சத்திய சீலராக நின்றனர்; துரி யோதனதியரோ அசத்தியம் பூண்டு பொங்கினர். பதினெட்டுநாள் யுத்தம் நடந்தது. பல்லாயிர மக் கள் உயிர் விடுத்தனர். முடிவில் அறம் வென்றது; பாபம் தோற்றது.

அங்ஙனமே பம்பாயில் ஓர் இடம் குருக்ஷேத் திரமாக விளங்கியது. சட்ட மறுப்புக் காலத்திலே தியாக மூர்த்தி யொருவன் உயிர்துறந்தான் சத்தி யத்தை நிலைநாட்ட. நமது பண்டிதர் வியந்தார், வாழ்த்தினர்; அந்த இடஞ் சென்று தரிசித்தார். அதன் விவரம்:—

உப்புச் சண்டையிலே பம்பாய் நகரம் முன்னணியில் நின்றது. சென்ற 1930-ம் வருஷம் அங்கே சீமைத்துணி மறியல் மிக மும்முரம். மொத்த வியாபாரிகளும் சில்லரை வியாபாரிகளும் தங்கள் கடைகளை மூடிவிடத் தொடங்கினர். நெல்லில் பதரும் நீரில் நுரையும் இருக்கும் அல்லவா ? சீமைத்துணி வியாபாரிகளில் இரண்டொருவர் சுயநலங்கொண்டு சிறுமை பூண்டனர்.

ஓரிடத்தில் சீமைத்துணிக் கிடங்கு இருந்தது. அங்கிருந்த துணிகளை மற்ளுரிடம் கொண்டுபோக ஒரு வர்த்தகன் முயன்ளுன். தொண்டர்களோ அக்கிடங்கின் வாசலில் மறியல் செய்து நின்ளுர்கள். போலீசின் உதவியை அவ்வியாபாரி நாடினன். அந்த உதவி உடனே கிடைத்தது. மோட்டார் லாரியில் துணிமூட்டைகள் ஏற்றப்பட்டன. மோட்டார் ஓட்டியின் அருகே, போலீஸ் சார்ஜண்டு உட்கார்ந்து கொண்டான். வாகனம் நகரத் தொடங்கியது. அப்போது தொண்டர்கள் சாத்வீகமாக அவ்வண்டியைத் தடுக்க முயன்றனர். ஆயினும் முடியவில்லை.

தொண்டர்களில் ஒருவன் பாபு கணன்; மிகவும் இளைஞன்; எடுத்த காரியத்தை இனிது நிறைவேற்ற எண்ணினன். உடனே மோட்டார் வண்டி வரும் வழியில் குறுக்கே படுத்துக்கொண்டான்.

போலீஸ் சார்ஜண்டோ, “அப்பனே எழுந்திரு. இல்லாவிடில் அனர்த்தம் விளையும்” என்

ஞன். தொண்டரிலும் சிலர், "ஆருயிருக்கு ஆபத்து நிகழுமே" என்று அஞ்சினர். பாபு கணன் அசையவில்லை. அவன் மனமும் தளரவில்லை. உயிர் போயினும் வண்டியை மறிக்க முனைந்தான். மோட்டார் வண்டி நகர்ந்து வந்தது. பலரும் முன் சென்று, அவனை வாரி எடுத்து, அகற்றிப் போட நினைத்தனர். அப்பாலன் அதற்கு இணங்கவில்லை. அனைவரும் அதிசயித்தனர். சிலர் யாது விளையுமோ என்று ஏங்கினர். வண்டி நிற்கும் என்று சிலர் நினைத்தனர். "போலீஸ் சார்ஜண்டு இருக்கிருன். பாபு கணனுக்கு உயிர் போகாது" என்று சிலர் எண்ணினர்.

மோட்டார் வண்டியோ பாபு கணனை நெருங்கி விட்டது. கணப் பொழுதில் அது அவன்மீது ஏறி விடுமே என்று பலரும் பதைத்தனர். "அன்னை பாரதியே! வருவது வருக, உன் பாதமே துணை" என்று அவன் துதித்தான். மோட்டார் வண்டி அப்பாலன் மீது ஏறி அப்பால் போய்விட்டது. அவனது ஆருயிரும் அக்கணமே அகன்றுவிட்டது.

அங்ஙனம் அமைதியுடன் உயிரை வழங்கினன் உத்தம பக்தன். அவனை மனக்கோயிலில் இருத்தித் தொழாத மாந்தர் இருப்பரோ? பண்டித மாளவ்யா அது கேட்டார்; அவன் உயிர் விடுத்த இடமே குருக்ஷேத்திரம் என்று நினைத்தார்; அந்த இடத்தைத் தரிசித்தார்; பம்பாய் வாசிகளும் தீர்த்த

யாத்திரை போவதுபோல் அந்த இடம் சென்று ஆனந்தக் கண்ணீரும் அழுகைக் கண்ணீரும் வடித்தனர்.

---

## 22. உயர் போதம்

பாரத பூமியிலே ஒரு மாகாணம் சிந்து. அங்கே முகம்மதியர் அதிகம்; இந்துக்கள் குறைவு. இரு வகுப்பினருக்குள்ளே சமரஸம் பூஜ்யம். அதனுல் இருவரும் வருந்துகின்றனர், வாடுகின்றனர். உப்புச் சண்டையின் காலத்திலே அங்கே ஹிந்து மகா சபை கூடியது. அப்போது பண்டித மாளவ்யா பேருரை நிகழ்த்தினர். அதன் சாரம் யாதெனில்:—

இந்துக்களும் முகம்மதியரும் சோதரர்கள். இருவரும் சேர்ந்து வாழவேண்டும்; ஒருமித்து வசிக்க வேண்டும். சீர்திருத்தத்திற்கு அடிப்படை ஒற்றுமை. ஒருவரை ஒருவர் நம்பவேண்டும். இல்லாவிடின், நிலையான சுயராஜ்யம் கிட்டாது. இருவரும் பரஸ்பரம் திருப்திகொண்டால், எவரும் அசைக்க முடியாது. இந்துக்கள் அனைவருக்கும் சுயராஜ்ய விருப்பம் உண்டு. இதில் சந்தேகமேது? எல்லாருக்கும் சுயராஜ்யம் அவசியம் தேவை. சுயராஜ்யம் இல்லாததால் வாழ்விலே ஒவ்வொரு நிமிஷமும் நாம் எவ்வளவோ நஷ்டமடைகிறோம். ஆதலின், இந்துக்கள், முகம்மதியர், சீக்கியர் அனைவரும் சுயராஜ்யம் எய்த, ஒன்று சேரவேண்டும். வேற்

றுமை என்பது தொலையவேண்டும். நம்மில் சண்டை சச்சரவு என்பது சிறிதும் கூடாது.

ஒரு சக்கரம் உடைந்தால், வண்டி எப்படி நக ரும்? அபிப்பிராய பேதம் எப்போது மிருக்கும். அதற்காக எந்த சமூகமும் சாந்தியைக் கைவிட முடியாது. நல்ல சிந்தையையும் மறக்க முடியாது. அபிப்பிராய பேதம் இருப்பதனால், விரோதம் உதிக்கவேண்டுமோ? இருவரும் ஒருமிக்கக் கூடுங் கள். பரஸ்பரம் விஷயத்தைச் சொல்லுங்கள். அபிப்பிராய பேதம் பறக்கும். ஒற்றுமை உதிக் கும். முடிவில் சத்தியமே ஜயிக்கும். ஒற்றுமைக் கான வழியை உடனே கண்டுபிடிக்கவேண்டும்.

இந்துக்களும் முகம்மதியர்களும் சண்டையி லேயே வாழமுடியுமா? சமாதானங் கொண்டால் தான் வாழலாம். "நாங்கள் தயார். முகம்மதியர் ஒத்துவரவில்லையே" என்று நீங்கள் சொல்லலாம். அதுபற்றி அதைரியம் வேண்டாம். விஷயத்தைச் சொல்லுங்கள். வேற்றுமை அகலும். ஒருவர் உங் கள் நோக்கினுக்கு ஒத்துவராமல் போனல், அவர் களை நேசிக்காது இருப்பதோ? உடம்புமட்டுமா கடவுள் கொடுத்தார்? மூளையும் கொடுத்திருக்கிறார். மூளை இல்லாது போனல், மிருகத்தைவிட நாம் கேவலமாவோம். ஆதலின், விவாதியுங்கள், விஷ யத்தைச் சொல்லுங்கள். வேற்றுமை கொண்டு நிற்போர் வழிக்கு வருவர். நியாயமிருந்தால், உங் களது கட்சி ஜயிக்கும்.

இந்த இந்தியா தேசம் இந்துக்களுக்கும், முகம்மதியர்களுக்கும் சீக்கியர்களுக்கும், பார்சியர்களுக்கும், பிறருக்கும் சொந்தம்; ஒரு சமூகம் மற்றொரு சமூகத்தை ஓட்டிவிட முடியாது. கையிலே ஐந்து விரல்கள். கட்டை விரல் போய்விட்டால் பத்தில் ஒருபங்கு பலம் குறைந்துபோம். எல்லோரும் ஒரு மனங்கொள்ளும்படி நடவுங்கள். ஒரு கிராமத்தில் எல்லோரும் இந்துக்கள், ஒரே முகம்மதியர் என்று இருந்தாலும், அந்த முகம்மதியன் நிம்மதியாக வாழவேண்டும். அதற்கு இந்துக்களின் மனப்பான்மையே மூலாதாரம். "இந்துக்கள் தொந்தரவு செய்யார்; உயிருக்கும் உடைமைக்கும் ஊறு நேராது" என்று அவன் நம்பவேண்டும். பரஸ்பர நம்பிக்கை மிகவும் அவசியம்.

யாரும் எவரைக் கண்டும் எந்த நிலையிலும் அஞ்சாது இருக்கும்படி நமது அரசியல் உருப்படவேண்டும். அப்படியானால் பெரிய வகுப்பார், சின்னவகுப்பார் என்ற பேச்சுக்கு இடம் இராது. ஒருநாள் சண்டையினால், தேசத்திற்கு நிலையான தீங்கு நேரும். எல்லோருக்கும் அவமானம் உண்டாகும். இத்தேசத்திலே ஒரு மாதுக்குத் துன்பம் நேர்ந்தால், தேச மாதாவுக்கே துன்பம் நேர்ந்ததாக நாம் அனைவரும் எண்ணவேண்டும்.

ஐரோப்பாவிலே எந்தப் பெண்ணும் நிர்ப்பயமாக வெளியே போகலாம். அந்த நிலைமை நமது

தேசத்திலே ஏற்படவேன்டும். சோதரர்களே! சோதரிகளே! எண்ணிப்பாருங்கள். நீங்கள் எல்லா ரும் மனிதர்கள், தெய்வ அம்சம் உங்களிடம் உண்டு. தன்னம்பிக்கை கொள்ளுங்கள். அனைவரும் ஒன்று சேருங்கள். பிறரை அடிப்பதற்கன்று. தற்காப்பி னுக்குத்தான்! சத்தியத்தைக் கைவிடாதீர்கள். பயத்தை விட்டு ஒழியுங்கள், அச்சமின்றி வாழ்ந் தால், மற்றக்கட்சி மதிப்புக் காட்டும்.

கனவான்களே! இப்போது மிகவும் நெருக் கடியான காலம். சண்டைமூட்டுவது சுலபம். ஒற் றுமைப்படுத்துவது கஷ்டம். இந்து-முஸ்லீம் சச்ச ரவு என்றால் எல்லாருக்கும் மானக்கேடு. ஒருவரை ஒருவர் நேசியுங்கள். பரஸ்பரம் அறிந்துகொண்டு, நேர்மையாக நடவுங்கள். இந்து மகா சபையை இவ் விதம் நடத்தினால் உங்கள் ஆன்மாவும் ஆண்டவ னும் ஆனந்தமடையும்.

---

## 23 சத்தியவான்

சத்தியவான் என்றால் இக்காலத்திலே முதன்மையாக மகாத்மா காந்தி. அவருக்கு ஈடாக மாளவ்யா. இருவரும் மறந்தும் பொய் உரையார். இருவரும் மெய்யின் வடிவம். காதால் கேட்பது கிடக்கட்டும்; கண்ணால் கண்டதே மெய்யாகும். காதால் கேட் பதைக் கண்ணால் கண்டாலன்றி நம்பார் பண்டிதர்.

1933-ஆம் ஆண்டிலே கல்கத்தா காங்கிரஸ் நடந்தது. அடக்குமுறை ஆர்ப்பரித்தது. காதால் கேட்டார் மாளவ்யா. நேரில் சென்று அடிபட்டவர் களைப் பார்த்தார். பின்பே அறிக்கையிட்டார் அக் கிரமத்தைக் குறித்து. இந்தியா மந்திரி மறுத்தார். மாளவியா அறைகூவி அழைத்தார்.

மெய்யே பேசும் மேன்மையாளனை யார் என்ன செய்யமுடியும்? அரசாங்கம் ஒன்றும் செய்ய முடியவில்லை. அதன் விவரம் இது :—

யாதொரு கூட்டமும் கூடாது என்று கல்கத்தா போலீசார் ஆணையிட்டனர். ஆயினும் 1933-ம் ஆண்டு ஏப்ரல் மீ 1-ந்தேதி கல்கத்தாவிலே காங் கிரஸ் கூடியது. தேசத்தின் பல பாகங்களிலிருந்தும் 2500 பிரதிநிதிகள் புறப்பட்டார்கள். அவர்களில் வழி நடுவே கைதியானவர் ஆயிரம் பேர். பாக்கி யுள்ள 1500 பேர் கல்கத்தா போய்ச் சேர்ந்தனர். அத்தனை பேருக்கும் கல்கத்தாவிலே தங்கியிருக்க வசதி கிடைத்தது. குறித்தபடி மாலை 3-மணிக்கு காங்கிரஸ் கூடியது. 250 பேர் பிரஸன்னமாயிருந் தனர். மிஸஸ் சேன் குப்தா தலைமை வகித்தார். ஏழு தீர்மானங்களும் நிறைவேறின.

அது சமயம் போலீசார் தோன்றி தடியடிப் பிரயோகத்தில் இறங்கினர். அடிமேல் அடிவிழுந் தும் ஒரு பிரதிநிதி அசையாமல் நின்றார். அவரு டைய மூக்குக் கண்ணாடி உடைந்துபோயிற்று. ஒரு

கண்ணும் ஊனமாயிற்று. தடியடியுடன் போலீசார் நிற்கவில்லை. காலாலும் உதைத்தனர்.

காங்கிரஸ் கூடுவதற்கு முன்பு ஐக்கிய மாகாணத்தின் 89 பிரதிநிதிகள் போலீஸ் ஸ்டேஷனிலே நன்கு அடிக்கப்பட்டனர். பூட்ஸ் காலாலும் உதைக்கப்பட்டனர். சிலர் வெகுநேரம் பிரக்ஞையில்லாது கிடந்தனர். சிலருக்கு இரத்தக்காயம். வயிற்றிலும் விலாவிலும் பட்ட அடி தாங்காமல் சிலர் பரிதவித்தனர் பலநாள் வரையில்.

கல்கத்தாவின் இதர போலீஸ் ஸ்டேஷன்களிலும் அம்மாதிரி அடியும் உதையும் பட்டோர் பலர். இவற்றை எல்லாம் விவரமாக எழுதி வெளியிட்டார் பண்டிதர். லண்டனிலே காமன்ஸ் சபையில் கேள்வி பிறந்தது. அப்போது இந்தியா மந்திரியாக இருந்தவர், ஸர் சாமுவேல் ஹோர் என்பவர். இவர், "பொய்யான தகவலை பண்டித மாளவ்யா போன்ற பெரிய இந்தியர் வெளியிட்டிருப்பது வருந்தத்தக்கது" என்று சொன்னார். அப்படியானல் பொய் சொல்லுவோர்மீது ஏன் நடவடிக்கை எடுக்கக்கூடாது என்று ஒருவர் கேட்டார். மாளவ்யா மெய்யே பேசுகிறவர் அல்லவா என்று இன்னொருவர் கேட்டார். அதன்மேல் "முற்றிலும் பொய்யான தகவலைப் பண்டித மாளவ்யா வெளியிட்டது மிகவும் வருந்தத்தக்கது" என்று இந்தியா மந்திரி மறுபடியும் சொன்னார்.

அதன்பின் இந்தியா மந்திரிக்கு மாளவ்யா கொடுத்த தந்தி இது:—“கல்கத்தாவிலே காங்கிரஸ் பிரதிநிதிகளை அடித்தது பற்றி அரசாங்கம் விசாரணை நடத்தட்டும். அவ்வளவையும் நான் மெய்ப்பிக்க முடியும். விசாரணை நடத்தாதுபோனல் என்மீது நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம். நான் தயார்”. இவ்விதம் பண்டிதர் தந்தி கொடுத்தும், இந்தியா மந்திரி விசாரணை நடத்தவுமில்லை. மாளவ்யாவின்மீது நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை.

அப்பால் வங்காள கவர்ன்மெண்டார் ஓர் அறிக்கை விடுத்தனர். மாளவ்யா சொன்னதெல்லாம் பொய்யென்று அந்த அறிக்கை பேசியது. மீண்டும் மாளவ்யா பத்திரிகைகளுக்கு எழுதினர். விசாரணை நடத்தினல் மெய்ப்பிக்கத் தயார் என்ருர். இல்லையானல் தம்மீது நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம் என்று சொன்னர். இரண்டும் இல்லையானல், பட்சபாதம் இல்லாத ஒரு கமிட்டியை நியமித்து எது பொய், எது நிஜம் என்று ஆராயலாம் என்ருர். இந்தியா மந்திரியும் இதர அதிகாரிகளும் பேசாமல் இருந்துவிட்டனர்.

---

## 24. சாகப்பொழுதில்லை

மனிதருக்கு வயது நூறு. இது பழங்காலத்தில். ஐம்பது, அறுபது வயது இருப்போர் அருமை. நமது பண்டிதருக்கோ வயது எழுபத்து ஏழு. இன்னும் சுக ஜீவியாகவே இருக்கிறார். காரணம் நடை உடையே. ஆகார விவகாரத்தை ஒழுங்குபடுத்தின், நெடுங்காலம் இனிது வாழலாம். இளைஞர் இதைக் கவனித்தல் வேண்டும். நாற்பதுக்கு மேல் நழுவலும் ஐம்பதுக்கு மேல் அசதியும் கொண்டு விடுதல் கூடாது.

பண்டிதரின் வருஷ தினம் தேசமெங்கும் கொண்டாடப்பட்டது. காசியில் நடந்த கொண்டாட்டம் வெகு விசேஷம். பெருமக்களும் பிரபுக்களும் குழுமியிருந்தனர். காசி மகாராஜாவும் வந்திருந்தார். பண்டிதர் நெடுங்காலம் சுகஜீவியாக வாழவேண்டுமென மகா யக்ஞம் நடந்தது. அனைவரும் வாழ்த்தினர். வேதியர் கீதமோதித் துதித்தனர். ஐம்பது ஆண்டுக்கு மேலாக தேச ஊழியம் புரிந்துவருகிறார் அல்லவா? அதனைக்குறித்து வாழ்த்துப்பத்திரம் வாசித்துக் கொடுத்தனர். அப்போது பண்டிதர் பேசியதின் சாரம்:—

“தேசத்தின் நிலை, ஹிந்து தர்மத்தின் நிலை இரண்டையும் நினைக்க நினைக்க என் மனம் கவலுகின்றது. இரண்டும் மகோன்னத நிலை அடைய வேண்டும். இதுபற்றி எல்லாம்வல்ல ஈசனைத் துதிக்

கிறேன். நமது நாகரிகம் மிகவும் புராதனமானது, மகா மேன்மை பொருந்தியதுமாம். அனைவருக்கும் நாம் அறிவுச்சுடர் கொளுத்தினேம். இது கண்டு நாம் பெருமை கொள்ளலாம். இச்சந்தர்ப்பத்தில் ஒரு வார்த்தை. இதர மதங்களைக் கண்டு நாம் வெறுப்புக்கொள்ள அவசியம் இல்லை.

"இந்து மதத்தை உணர்ந்துகொள்ள ஹிந்து சர்வகலாசாலையினும் சிறந்த கலாசாலை உலகெங் கணும் இல்லை. இந்தியாவிலும் உலகத்திலுமாக அத்தகைய சர்வ கலாசாலைகள் ஏராளமாக ஏற் படுதல் வேண்டும். காசி ஹிந்து சர்வ கலாசாலைப் பூமியிலே பெரிய ஆலயமொன்று அமைக்க ஆசை. அதற்கான ஆயத்தங்கள் தொடங்கவில்லை. ஆனது பற்றி வருந்துகிறேன். எனவே, அந்த ஆசை முற்றுப்பெற எல்லாரும் உதவிபுரிதல் வேண்டும்.

"தள்ளாத வயதாகிவிட்டது என்பர் சிலர். எனக்கோ சாகப் பொழுதில்லை. தலைக்குமேல் பல வேலைகள் உள. அவற்றை முடித்தபின்பே கண்மூட வேண்டும். இன்னும் பத்து வருஷமேனும் உயிர் தாங்கி நிற்க விருப்பம். அதற்குள் முக்கியமான காரியங்களைச் சாதிக்கலாமென எண்ணுகிறேன் ஆண்டவன் அருள் புரிவானாக!"

உலக இன்பத்தை நுகர, அல்லது பிள்ளை பேரன்களுடன் மகிழ, இன்றேல் பதவி கண்டு களிக்க, இன்னும் உயிரோடு இருக்க வேண்டுமென

அவர் விரும்பவில்லை. எடுத்த காரியத்தை நிறைவேற்ற, தேசநிலை உயருவது பார்க்க, தர்மம் செழிப்பது காணவே, இன்னும் பத்தாண்டு வாழ விரும்புகிறார். பிறவி எடுத்த பயன் பேரூழியம் புரிதல்; பாருலகம் பரிமளிக்கப்பார்த்தல். இப்பயனைக் காண விரும்பும் பெரியாரின் பெருமையே பெருமை!

---

## 25. பதவியேற்புக்கு வாழ்த்து

புதிய அரசியலின்படி தேசமெங்கும் தேர்தல் நடந்தது. ஆறு மாகாணங்களிலே காங்கிரஸ்காரர் பெருமித வெற்றி பெற்றனர். அந்த இடங்களில் மந்திரி பதவி ஏற்கும்படி காங்கிரஸ்காரரை அரசாங்கம் அழைத்தது. காங்கிரஸ்காரர் மறுத்தனர். காரணம் இது. கவர்னர்களுக்கு விசேஷ அதிகாரங்கள் உள. மந்திரிகளின் அன்றாட வேலையில் கவர்னர் தலையிட முடியும். இந்நிலையில் பதவி ஏற்று என்ன பயன்?

ஆதலினால், தலையிடுவதில்லை என்று வாக்குறுதி தரவேண்டுமென நாம் விரும்பினோம். வாக்குறுதி கேட்பானேன் என்று நம்மவரிலும் பலர் வாதித்தனர். அப்போது தேசத்திலே வாதப் பிரதிவாதங்கள் தோன்றின. மகாத்மா காந்தி ஒரு புறம், இந்தியா மந்திரி, ராஜப்பிரதிநிதி ஒரு புறம் அறிக்கைமேல் அறிக்கை விடுத்தனர். காங்

கிரஸ்காரர் பதவி ஏற்காவிடின், அரசியல் நடவாதென அரசாங்கம் கண்டுகொண்டது; உடனே உறுதிமொழியும் தந்தது. அதன்மேல் பதவி யேற்புக்கு வாழ்த்துக் கூறி மாளவ்யா ஓர் அறிக்கை விடுத்தார். அதன் சாரம் யாதெனில்:— வாக்குறுதி கேட்பதில் மூன்று மாதம் வீணாயிற்று; இது தப்பு என்று காங்கிரஸ்மீது சிலர் குறை கூறுவர். இந்த மூன்று மாத காலத்தில் நடந்த வாதப் பிரதிவாதங்களால் மிக்க பலன் உண்டு. வாக்குறுதி வேண்டுமென்று காங்கிரஸ் கேட்டதனால் தான், இந்தியா மந்திரி, ராஜப்பிரதிநிதி முதலியோர் தங்கள் கருத்து இன்னதென விளக்க இசைந்தனர். காங்கிரசின் நிலைமை முன்னையிலும் வலுத்துளது.

மந்திரி பதவியை ஏற்கும்படி காங்கிரஸ் மகாசபை தீர்மானித்திருப்பதே சரி. மோசமான புதிய அரசியல் சட்டத்தை மாற்றிப்போட காங்கிரஸ் முயலும்; ஆயினும் அதற்கு நாளாகும். இடையிலே, மகாஜனங்களின் பரிதாப நிலையைப் போக்க, என்னென்ன செய்ய வேண்டுமோ அதெல்லாம் காங்கிரஸ் செய்யும். நெற்றி வியர்வை நிலத்தில் விழும் வண்ணம் பாடுபடும் லட்சோபலட்சம் ஜனங்களுக்கு கதிமோட்சம் வேண்டுமென்று ஐம்பது வருஷகாலமாக அரசாங்கத்தை வேண்டி நின்றது காங்கிரஸ். சர்க்கார் ஒன்றும் செய்யவில்லை. ஆதலின் மக்

களின் நிலையை உயர்த்த இயன்றதை யெல்லாம் காங்கிரஸ் செய்யும். காங்கிரசுக்கு மெஜாரிடி பல முள்ள மாகாணங்களில் அக்காரியங்கள் நடக்கும். இதர ஐந்து மாகாணங்களிலும் சட்டசபையிலுள்ள காங்கிரஸ்காரர் ஒன்றுபட்டு, தேசீய முன்னேற் றத்தை வற்புறுத்துவார்கள் என்று நினைக்கிறேன். பரிபூரணமான சுயராஜ்யம் ஏற்பட்டால்தான், தேசீய மதிப்பு உயரும்; இந்தியாவும் இதர தேசங் களுக்குச் சரிசமமான அந்தஸ்து அடையமுடியும்.

---

## 26. முடிவுரை

இந்தியாவின் சுதந்திர சரிதம் ஒருநாள் வரையப்பெறும். அதில் பண்டித மாளவ்யா முக்கிய ஸ்தானம் பெறுவார். அப்பெரியாரின் பெயர் என்றும் நின்று நிலவும். காரணம், காசி ஹிந்து சர்வ கலாசாலை. ஐம் பது ஆண்டுக்கு மேலாக அரிய ஊழியம் புரிந்து வரு கிறார். சுயநலம் என்பது இம்மியும் இல்லை. தியாகமே லட்சியம்; தேச முன்னேற்றமே கோட்பாடு. எனவே தேசமக்கள் என்றும் அவரை மறவார்.

இந்து சமூகம் அவரைக் கொண்டாடும். வேறெ வரும் அவரைப்போல் சமூக உயர்வினுக்கு உழைக் கவில்லை. அவருடன் சிலர் மாறுபடலாம். ஆயினும் அவரது நோக்கிலே அப்பு அழுக்குக் காண முடி யாது. பிரமாதமான காரியங்கள் சாதித்திருக்கிறார்.

கனவிலும் சரி, நினைவிலும் சரி, நமது பாரத பூமி யின் சிந்தனைதான் அவருக்கு!

தேசநலங்கருதி, வறுமை விரதம் பூண்டார் பண்டிதர். பணம்தேடிக் குவிக்க ஆசைகொண்டிருப் பின், மலைபோல் குவித்திருக்கலாம். வக்கீல் தொழி லில் மிக்க வரும்படி கிடைத்து வந்தது. உன்னத பதவியும் கைக்கு எட்டுந்தறுவாயில் இருந்தது. இரண்டையும் உதறித்தள்ளினார். அவர் பெரிய குடும்பி. எனவே பொறுப்பு அதிகம். எனினும் மனைவி மக்களின் பாசத்தைவிட தேச பாசத் தையே அவர் பெரிதாக மதித்தார். தேசக் கட மையே அவருக்கு முதற் கடமை ஆயிற்று.

வட்ட மேஜை மகாநாட்டின் நிமித்தம் கப்ப லேறி அவர் சீமை சென்றார். பரம வைதிகர்; மிக்க ஆசார சீலர். கப்பல் பிரயாணத்தினால் கர் மானுஷ்டானம் கெடும். எனினும், தேசாபிமானமே முதன்மையாக நின்றது. எழுபதாம் ஆண்டில் அன்னிய தேசம் போனார். மாளவ்யா குருட்டு வைதிகர் அல்லர். நேர்மையான வைதிகத்தின் வடிவமே என்னலாம். வயதோ தள்ளாத வயது. கடல் பிரயாணம் சாமானியம் அன்று.

கப்பல் பிரயாணம் செய்யுமுன், சிறைவாசத்தி னால் உடம்பு மெலிந்துவிட்டது. விடுதலையான பின்பும் நோய் நொடி. உடம்பில் சக்தி குறைவு. இந் நிலையில் புறப்பட்டார். "என்ன! இந்த வயதிலா

சீமைக்கு!" என்றனர் சிலர். "ஆம்! இந்தச் சடலம் தேச சேவைக்காக எடுத்தது. தேச சேவை செய்கையில், இந்தச் சடலம் இங்கே மடிந்தால் என்ன, இங்கிலாந்தில் மடிந்தால் என்ன? தேச சேவையே பெரிது" என்றார் பண்டிதர்.

மாளவ்யா மகா கல்விமான், பரம தேசீயவாதி, இடைவிடா உழைப்பாளி; பரம வைதிகராயினும், வைதிகம் என்பது இம்மியும் இல்லாத பலர் அவரது நண்பர்கள். அபிப்பிராய பேதம் காரணமாக, யாரையும் அவர் வெறுக்கார்; மற்று நேசிப்பார்; சோதரனேபோல் கூடிக் குலாவுவார். யார் மீதும் கடுஞ்சொல் கூறார். மமதை என்பது அவரிடம் தலைகாட்டாது. ஆண்டி, அரசன் யாவரிடமும் அன்பே கொள்வார்.

பெரியாரைக் கண்டால் கையெடுத்துக் கும்பிடுவார். கை இரண்டும் குவிய மனமும் குவியும். இவரை ஆசாரத் திருத்தக்காரர் என்ன முடியாது. ஆனாலும், அவரது மனையாள் பொதுக் கூட்டங்களில் தலைமை வகிப்பதுண்டு; சட்ட மறுப்புக் காலத்தில் கொடிதாங்கி ஊர்வலத்தில் கலந்துகொள்வதும் உண்டு. அவர் குடும்பத்தின் இதர மாதரும் அப்படித்தான். மாதர் முன்னேற்றத்தில் அவருக்கு சிரத்தை அதிகம்.

பண்டிதருக்கு சங்கீதத்தில் மிகவும் பிரேமை. சங்கீத இன்பம் துய்க்க ஆசை அதிகம். ஆனால் அவகாசம் கிடைப்பதில்லை. சங்கீத இன்பம் கொள்ளின், சுகம் வளரும் என்பதே அவர் கொள்கை.

விருந்துகள், கச்சேரிகள் இவற்றிற்கு அவர்போதல் அருமை. இரவில் நெடுநேரம் விழித்திருந்து வேலை செய்வார். இவ்வளவு உழைத்தும், சுகஜீவியாக இருக்கும் காரணம் மாசற்ற மனமே. எளிய வாழ்க்கையும் என்று சொல்லலாம்.

பண்டிதர் மகா தர்மிஷ்டர். யார் வந்து எது கேட்பினும் இயன்றவளவு உதவுவார். பிறரது துயரங்காணின் பண்டிதரின் கண்களில் நீர் ததும்பும். அவரது பொது வாழ்வு மகிமை வாய்ந்ததே. தனி வாழ்வும் அப்படித்தான். அவருக்கு விரோதிகளே கிடையாது. மகாத்மா காந்திக்கு அடுத்தபடியாக மகிமை வாய்ந்த புருஷர் பண்டித மதன் மோகன் மாளவ்யாவே!

தர்மாத்மாக்களைக் காணின், மிருகங்களும் சொன்னபடி கேட்கும். காசி ஹிந்து சர்வகலாசாலை வெகு விஸ்தாரமான பூமியில் உளது. ஒரு சமயம் மோட்டார் வாகனத்தில் அப்பூமியைச் சுற்றி வந்தார் பண்டிதர். பசுவொன்று குறுக்கே நின்று கொண்டது. வண்டிக்காரன் எவ்வளவோ சத்தம் செய்து பார்த்தான்; பசு அசையவில்லை. அதட்டி வெருட்டினன் வண்டிக்காரன். அப்போதும் அந்தப் பசு நகரவில்லை.

அப்பனே அதட்டாதே என்றார் பண்டிதர். பின்பு, பசுவை நோக்கி, “ தாயே! ஏன் கோபம்? ” என்று அன்பு சொட்டப் பேசினர். உடனே பசு வாலை ஆட்டியது; வழிவிலகியும் நின்றது. வண்டிக்காரன் பிரமித்தான் ; போதமும் பூண்டான்.

காசி சர்வகலாசாலையை அன்பர் சிலர் பார்க்க வந்தனர். ஒவ்வோர் இடமாகக் காட்டிவந்தார் மாளவ்யா. ஒருவர், "ஐயா! நல்ல மதகு கட்டியிருக்கிறீர்கள். அதன் வழியே கங்கைநீர் பரிபூர்ணமாக ஓடிவரவேண்டுமே ? எங்கே?" என்றார்.

பண்டிதர் சொன்ன பதில்:—"அன்ப! கங்கை ஓடிவருவதைக் காணவில்லையா என்ன? (தொலைவில் மாணவர் வரிசையாகச் செல்வதைச் சுட்டிக்காட்டி) அதோ பாருங்கள்! ஞானகங்கை பிரவாகமாகச் செல்லுகிறது !"

மற்றோர் அன்பர் மின்சார விளக்குத் தூண்களை நோக்கினர்; அவை சரிஜோடியாக இல்லை; ஏற்றத்தாழ்வாக இருந்தன. "இதென்ன! ரஸிகன் ஒவ்வானே. பார்க்கக் கூசுமே அவன் கண் !" என்றார். பண்டிதர் புன்னகை பூத்தார்; "நல்லது! அவை பாரதமாதாவின் வறுமையை எடுத்துக் காட்டுவன" என்றார். அன்பர் என்ன சொல்லுவார் ?

இத்தகைய மகானது சரிதம் எழுத எழுத விரியும். மகாத்மா காந்தி கூறும்வண்ணம், அவர் ஹிந்துக்களின் திலகம்! தேசபக்தரின் சிரோரத்னம்! பகைவரையும் நேசிக்கும் பரமபுருஷன். அப்பெருமான் நீடூழிகாலம் வாழ்க! வந்தே மாதரம்!

---

PRINTED AT THE MOEDL PRESS, MADRAS, (19371113-1-21.)



# வீர கேசரி
# விட்டல்பாய் படேல்

அற்புத சரித்திரம்

10 படங்களுடன் :: அணா 12

'சுதேச மித்திரன்' உதவி ஆசிரியர்

திரு. ஆர். கிருஷ்ணமாச்சாரியார்

இயற்றியது

---

இந்நூலைப்பற்றிய முக்கிய அபிப்பிராயங்கள்

தாருல் இஸ்லாம் :—* இப்பெரியாரது வாழ்க்கை நலன்களை இந்நூல் மிகத் தெளிவாக எடுத்து காட்டவல்லதா யிருக்கிறது. இந்நூலைத் தமிழர் படித்துணர்வது அவசியமே.

சுதந்திரச் சங்கு :—* படேலது தேச பக்தி, வீர உணர்ச்சி, அறிவுச் சொற்கள் முதலியவைகளை, நமது பார்வைக்கு வந்துள்ள இத்தமிழ் நூல், அப்படியே படம் எடுத்துக் காட்டுகின்றது. தேசத்துக்கு அத்தியாவசியமான இத்தகைய நூல்களை மேலும் மேலும் ஸ்ரீயுத கிருஷ்ணமாச்சாரியார் எழுத வேண்டுமென்றும், அல்லயன்ஸ் கம்பெனியார் பிரசுரிக்க வேண்டுமென்றும், தமிழர் ஆதரிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

தமிழ் நாடு:—* வீரர் படேலின் ஜீவிய சரித்திரத்தை தமிழர் ஒவ்வொருவரும் படித்து, வீர வாழ்வு பெறவேண்டுவது அவசியம்.

தினகரன் :—* இதைப் படிக்கையில், மனதில் உற்சாக மேற்படாத தேசாபிமானி எவருமிருக்க முடியாது.

இந்து சர்தனம் :—* இந்நூல் தமிழ் மக்கள் எல்லோராலும் ஆர்வத்துடன் படிக்கவேண்டிய தொன்றாகும்.

வீர கேசரி :— * * கற்றார்க்கும் மற்றார்க்கும் இந்நூல் பயன்படத்தக்கது.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை

சென்னை பிரதம மந்திரி

*ராஜாஜி*

# குட்டிக் கதைகள்

இந்நூலில் அடங்கியவை :—

(1) தேவானை
(2) அன்னையும் பிதாவும்
(3) திக்கற்ற பார்வதி
(4) ஜகதீச சாஸ்திரிகள் கனவு
(5) அறியாக் குழந்தை
(6) முகுந்தன்
(7) தீபாவளியில் தேவ தரிசனம்
(8) எலெக்ஷன் கதை
(9) சோதிடம் பொய்யாகுமா ?
(10) வேணுகானம்
(11) பட்டாசுக் கட்டு

நல்ல காகிதத்தில் பெரிய எழுத்துக்களில் அழகாய் அச்சிடப்பட்டது. உங்கள் பிரதிக்கு உடனே எழுதிக்கொள்ளவும். விலை அணா **12.**

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

# The Great European War

# ஐரோப்பிய மஹா யுத்தம்

## துரைத்தனத்தாரும் அங்கீகரித்தது

256-பக்கங்கள் : : 58-ஆப்டோன் படங்கள்

### விலை ரூ. 1—8—0

ஐரோப்பிய தேசங்களின் சரித்திரத்தையும், அதன் மூலமாய் வெளியாகும் அநேக ஸூக்ஷ்மவஸ்துக்களையும் ஆதிமுதல் ஆராய்ந்து இத்த யுத்தத்திற்கு ஏற்பட்ட காரணங்களையும், ஐரோப்பாவிற்கும் நம்தேசத்திக்கும் ஏற்பட்டுள்ள நெருங்கிய சம்பந்தத்தையும், இவை போன்ற பல விஷயங்களையும், எக்காலத்தும் எல்லோருக்கும் உபயோகமாகும்படி எழுதப்பட்டிருப்பதால். இது யாவர்க்கும் பயன்படு மென்பதில் தடையில்லை. இந்நூல், தெளிவாயும், படிப்ப வர்க்கு மனோத்ஸாகத்தை யுண்டுபண்ணும் வண்ணம், கதைப் போக்கிலேயே எழுதப்பட்டிருப்பது மிகவும் பாராட்டத்தக்கது.

சில முக்கிய அபிப்பிராயங்கள்

*The Hindu.*—The style is clear, easy flowing and graphic, the details of European History given in the book are full, well arranged and to the point, no more, no less. * * the noble part played by India in the struggle are all narrated with a vividness and intensity that grip the reader by the interest created. Appendices are full of information. It is on the whole, good work done in a new direction.

*The Madras Mail.*—* * An admirably written and comprehensive book on the War. The book gives not merely a lucid account of the War but furnishes an historical background for the intelligent understanding of the conflict of political and national ideals that has brought about this War.

கிருஷிகன்:—* * பார்த்தவுடன் கண்ணைக் கவரும் வித மாக அச்சிடப்பட்டிருக்கிறது. அதற்கேற்பவே, உள்ளடங்கிய விஷயமும் சிலாகிக்கத் தக்கவாறு அமைந்திருக்கிறது. ஐரோப் பிய தேச சரித்திர சம்பந்தமான பல விஷயங்களையும் விவரித்திருப் பதால், ஐரோப்பாவைப்பற்றிய விஷயங்களை சாமான்ய ஜனங்களும் அறிய இது சிறந்த ஸாதனமாகும் என்று நிச்சயமாய்ச் சொல்ல லாம்.

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

# விக்ரமசிங்கன் கோட்டை மர்மம்

இந்நாவல் பெயர்பெற்ற துப்பஞன ஷண்முகசுந்தரத்தின் துப்புத்திறத்தை நன்கு விளக்கிக் காட்டுகிறது. எளிய நடை. எடுத்தவர் படித்து முடிக்காமல் கீழே வைக்கமுடியாது. ரூ. 1—0—0

---

சில முக்கிய அபிப்பிராயங்கள்

ஸ்ரீமான் வா. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள், எம்.ஏ.—*கதையின் சுவையும் கற்கண்டின் சுவைபோல ஒரே தன்மையதாய் முதன்முதல் இறுதிவரையும் நன்கு அமையப் பெற்றுள்ளது. இந்நூலின் முக்கிய புருஷஞன ஷண்முகசுந்தரத்தின் துப்பறியும் திறமும், பக்தியின் சிறப்பும், உத்தம குணங்களும் படிப்பவர் மனதைக் கவரத்தக்கன.

*New India.*—This is an original detective tale in Tamil. The hero of course, is the detective Shanmugasundaram, who has already made himself popular as the hero of a novel bearing that name and written by the same author. * * The Story is full of interest from beginning to end.

*The Hindu.*—This is an interesting detective novel. The story is designed to bring out the strength and value of chastity for womenfolk and as such, the book deserves to be placed in the hands of all young girls. The style is simple and the printing good.

நவசக்தி.—* இந்நூலுக்கு உயிர்நாடியாகவுள்ள ஷண்முகசுந்தரம் தன்னிடம் ஒப்புவிக்கப்பட்ட குற்றத்தை ஆராய்ச்சி செய்வதில் காண்பிக்கும் சாமார்த்தியங்கள் போற்றத் தக்கனவாயிருக்கின்றன. இந்நூலைப் படிக்குங்காலத்து உள்ளத்தில் ஒருவித இன்பம் உண்டாகிறதென்பதை ஈண்டும் குறிப்பிட விரும்புகிரேம். இதை ஒவ்வொருவரும் படிக்கவேண்டுவது அவசியம்.

சுதேசமித்திரன்.—* படிக்கப் படிக்க அறிவையும், தெய்வ பக்தியையும், கற்பின் மகிமையையும், பசுமரத்தாணிபோல், மனதில் பதியுமாறு இப்புத்தகம் எழுதப் பெற்றிருப்பதால் இதனைப் படிப்போர் பயனடைவார்களென்பது திண்ணம்.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

## :: நால்வர் சரித்திரம் ::

நால்வர் திருவுருவப்படத்துடன் கூடியது

[மா. துரைசாமி முதலியார் அவர்கள் இயற்றியது]

சாதா பைண்ட் அணு 10 :: அட்டை பைண்ட் அணு 12

— சில முக்கிய அபிப்பிராயங்கள் —

லோகோபகாரி.—* இனிய தமிழில், எளிய நடையில் தெளிவான முறையில் எழுதியிருக்கிறார். நால்வர் பாடிய மேலான பாடல்களும் இதில் இடையிடையே கலந்து நிலவுகின்றன. சைவர்கள் மட்டுமேயன்றித் தமிழர்கள் ஒவ்வொருவரும் நால்வர் சரித்திரத்தைப் படித்து இன்பமும் பயனும் அடைதல் இன்றியமையாதது. பெரியோரும், சிறியோரும், பெண்களும் பிள்ளைகளும் இதனைப் படித்துப் பயனடையலாம். கல்வியிலாகாத் தலைவர்கள் இப் பத்தகத்தைப் பள்ளிப் பிள்ளைகளுக்குப் பாடமாக வைத்தல் நலம். இதனை வெளியிட்ட சென்னை, மயிலாப்பூர், அல்லயன்ஸ் கம்பெனியார் திருப்பணியை நாம் மிகவும் போற்றுகிறோம்.

* * *

நவசக்தி.—சைவப் பயிரைத் தழைத்தோங்கச் செய்த சமய குரவரான நால்வருடைய சரித்திரங்களைச் சுருக்கமாக அழகான தெள்ளிய நடையில் ஸ்ரீமான் மா. துரைசாமி முதலியார் எழுதியிருக்கிறார். இந்நூலைக் காணும்போதே எமக்கு ஆநந்தம் உண்டாயிற்று. இதனுடைய மேல் அமைப்பும், உள் அங்கங்களும் எம்மைப் பெரிதும் மகிழ்வித்தன. நால்வர் ஒவ்வொருவருடைய சரித்திரத்திலும் அவரவர் அவ்வப்பொழுது பாடிய பதிகங்கள் படிப்பவருடைய உள்ளத்தைப் பரவசப்படுத்துகின்றன. அழகான தமிழ் நடையில் நால்வருடைய சரித்திரத்தையும் ஒரே நூலில் நாம் இப்பொழுது தான் முதல் முதலாகக் காண்கிறோம்.

* * *

சுதேசமித்திரன்:—சென்னை, மயிலாப்பூரில், அரிய நூல்களைப் பதிப்பித்துத் தமிழுலகுக் குதவிவரும் அல்லயன்ஸ் கம்பெனியார் இந்நூலையும் பதிப்பித்திருக்கின்றனர். சைவர்களிற் பெரும்பாலோர் நால்வர் சரிதத்தினைப் படித்திருப்பினும், சுருக்கமாக விஷயங்கள் ஒன்றையும் விடாமல் அறிந்துகொள்ள விரும்புவோருக்கு, இந்த நூல் தோன்றாத் துணையாகவிருக்கும். ஆங்காங்கு சரிதப் போக்கை ஆதரிப்பனவாயுள்ள பாடல்களும் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

---



# கண்ணன்
# காட்டிய வழி

அதாவது

## பகவத்கிதையின் பொருள் விளக்கம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

இயற்றியது :: அணு 8

முக்கியமான சுலோகங்களும் உரையும் அடங்கியுள்ளது

### பொருளடக்கம்



---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.